4 பக்கங்கள் 13 காசுகள்:

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 மதுரை 2—2—72 புதன் மலர் 27

### விபீஷணர்களாம்
### மந்திரி ராமச்சந்திரன் ஆவேசம்

சென்னை, ஜன. 30—

தி. மு. க. அரசை கவிழ்க்க மத்திய அரசு சதி செய்வதாகவும் — இந்தச் சதிவேலைக்கு மத்திய அமைச்சர் மோகன் குமாரமங்கலமும், வலது கம்யூனிஸ்ட் தலைவர் எம். கல்யாணசுந்தரமும் விபீஷணர்களாகத் துணை போவதாகவும் — யார் என்ன செய்தாலும், இன்னும் 20 ஆண்டுகளுக்கு தி. மு. க. அரசை அசைக்கவோ முடியாது. என்றும் — அதற்குக் காரணம் பெரியார் போட்ட விதி அப்படி இருக்கிறதென்றும் — மைலாப்பூரில் நடந்த அண்ணா பிறந்த தினக் கூட்டத்தில் அமைச்சர் ராமச்சந்திரன் பேசினார்.

### மண்டபம் மாணவர் போராட்டம் தீவிரமாகிறது

மண்டபம், ஜன. 1—

மண்டபம் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் தங்களின் தலைமையாசிரியரை நியாயமற்ற முறையில் மாற்றம் செய்ததை எதிர்த்து தொடர்ந்து உண்ணாவிரதம் இருந்து வருகின்றனர்.

ஜன. 30-ம் நாள் மாணவர்கள் அரசாங்க பஸ்ஸை மறியல் செய்து தங்களின் எதிர்ப்பை தெரிவித்தனர்.

போராடும் மாணவர்களுக்கு ஆதரவாக தங்கச்சிமடம், பெரியபட்டினம், உடுக்காவலசை அரசினர்பள்ளி மாணவர்களும் வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர்.

# அடக்குமுறைகளைக் கைவிடுக

## ஆவடி தொழிற்சங்கத் தலைவர்கள் மீது தடியடிக்கு கண்டனம்

## கோவையில் 2000 தொழிலாளர் கண்டனஆர்ப்பாட்டம்

கோவை, ஜன. 30—

சென்னை ஆவடியில், மத்திய சர்க்காரின் டாங்குத் தொழிற்சாலைத் தொழிலாளர் மீதும், தொழிற்சங்கத் தலைவர்கள் வி. பி. சிந்தன், குசேலர், கே. எம். சுந்தரம் ஆகியோர்கள் மீதும், 27, 28 தேதிகளில் காட்டுமிராண்டித்தனமாகத் தடியடி நடத்தியதைக் கண்டித்து ஆவேச ஊர்வலம் கோவையில்நடந்தது.

கோவை காந்திபுரத்திலிருந்து காட்டூர், அனுப்பர்பாளையம், அவனாசிரோடு, பெரியகடை வீதி, ஒப்பணக்கார வீதி, மேட்டுப்பாளையம் ரோடு வழியாக தெப்பகுளம் மைதானத்தை அடைந்தது, அங்கு கண்டன பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் சி. என் கிருஷ்ணசாமி. எஸ். இருளப்பன், கே. சிவசாமி, வேணுகோபால், திரு வேங்கிடம், பி. நடராசன், எம். கோவிந்தன், கே ஆர். ஜகநாதன் ஆகியதொழிற்சங்கத் தலைவர்களும், மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்களும் ஊர்வலத்திற்கு தலைமை தாங்கினார்கள். ஊர்வலத்தில் சுமார் 200 தாய்மார்கள் உட்பட 2000 பேர்களுக்கு மேல் பங்கு கொண்டனர்.

### கண்டன முழக்கம்

தடியடியை கண்டித்தும், தி.மு.க. அரசின் பாசிஸ்ட் அடக்கு முறையைக் கண்டித்தும், கைதானவர்களை விடுவிக்கக் கோரியும் தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஏற்கக் கோரி, தொழிலாளர்கள் ஒற்றுமையை வளர்க்கக் கோரியும் கோஷங்கள் எழுப்பப்பட்டன. பாதை நெடுகிலும் ஏராளமான மக்கள் ஊர்வலத்தை நின்று பார்த்தார்கள்.

### வலதுகம்யூனிஸ்டு வரவில்லை

இந்த தடியடி தர்பார் செய்தி கோவையில் 28-1-72-ம் தேதி பிற்பகல் எட்டியவுடன் மார்க்சிஸ்ட் கட்சி கோவை மாவட்ட கமிட்டி சார்பில் வலதுசாரி கம்யூனிஸ்ட் தலைவர்களுடன் தொடர்புகொண்டு கண்டன ஆர்ப்பாட்டத்தை கூட்டாக நடத்த வரும்படி அழைத்தோம். இரவில் நேரில் கலந்து பேசலாம் என்றார்கள். ஆனால் யாரும் வரவில்லை கலந்து பேசவும் இல்லை. கண்டன ஆர்ப்பாட்டத்திற்கு ஏற்பாடு செய்யவும் இல்லை.

ஆயினும் மார்க்சிஸ்ட் கட்சி இடைக்கமிட்டிகள், கிளைகள், இஞ்சினியரிங் தொழிலாளர் சங்கம், மற்ற சி. ஐ. டி. யூ. ஸ்தாபனங்களை சேர்த்து கண்டன ஊர்வலத்தை நடத்தினர்கள்.

### முதல் தடவை அல்ல

வலதுசாரி கம்யூனிஸ்ட்கள் இந்த அடக்கு முறையைக் கண்டும் ஏன் பேசாமல் இருக்கிறார்கள் என்று தொழிலாளர்கள் ஆச்சரியத்தோடு கேட்கிறார்கள். இது முதல் தடவையல்ல. முன்பு வி. பி. சிந்தன், குசேலர், ஹரிபட், பரமேஸ்வரன் ஆகிய தொழிற்சங்க தலைவர்களை தி. மு. க. அரசு பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்த போதும் சிம்சன் தொழிலாளர் போராடிக் கொண்டிருந்தபோதும் கண்டன ஆர்ப்பாட்டங்கள், கூட்டங்களை கூட்டாக நடத்த மார்க்சிஸ்ட் கட்சியும், சி. ஐ. டி. யூ. சங்கங்களும் அவர்களை அழைத்த போதும் வருவதாக ஒப்புக் கொண்டு பிறகு வரவில்லை. அதே முறையில் இப்போதும் நடந்து கொண்டார்கள்.

## தி. மு. கழக ஆட்சிக்கு பி.ராமமூர்த்தி எச்சரிக்கை

கோவில்பட்டி, பிப். 1—

"தொழிலாளி வர்க்கத்தின் மீது தி. மு. க. அரசு தொடுத்து வரும் அடக்குமுறைகளைக் கைவிட வேண்டும். இல்லையேல் தமிழகம் முழுவதும் தொழிலாளர்களை ஒன்று திரட்டி மாபெரும் போராட்டம்நடத்துவோம்என" தி. மு. க. ஆட்சியை தோழர் பி. ராமமூர்த்தி எச்சரித்தார்.

கோவில்பட்டி, பிப். 1—

கோவில்பட்டி நகரமார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கூட்டம் இங்குள்ள காந்தி மைதானத்தில் டி. பரமசிவம் தலைமையில் நடந்தது. கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

காங்கிரஸ்காரர்கள் கட்சியின் அரசியல் ஆதாயத்திற்காக நடந்து முடிந்த போரில் இந்தியாவின் வெற்றிக்கு இந்திராதான் காரணமென்று சொல்வது பேடித்தனமானது. இந்தியாவின் வெற்றி இந்திராவுக்கு கிடைத்த வெற்றி அல்ல. நமது ஜவான்களுக்கும் வங்கதேச இளைஞர்களுக்கும் கிடைத்த வெற்றியாகும்.

### வாய்ப்பந்தல்

"67-க்கு முன்பு ஏழைகளுக்குப் பாடுபடுவோம்; வறுமையை ஒழிப்போம்; நிலமில்லாதவர்களுக்கு நிலம் கொடுப்போம்; வேலை இல்லாதவர்களுக்கு வேலை கொடுப்போம்" என்று தி. மு. க. வினர் பேசினர். காங்கிரசின் ஏகபோக ஆதிக்கம் ஒழிவதற்காக நாங்களும் தி.மு க வுடன் கூட்டு சேர்ந்தோம். அதன் பின் தி. மு. க. வும் ஆட்சிக்கு வந்தது. ஆனால் மக்களுக்கு தேர்தல் காலத்தில் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற தி. மு. க. தவறி விட்டது. எனவே 71 தேர்தலில் தி. மு. க. வின் உறவை முறித்துக் கொண்டோம்.

தி மு கழகம் ஆட்சிக்கு வந்து 5 வருஷமாகிவிட்டது. தேர்தல் காலத்தில் மக்களுக்கு கொடுத்த வாக்குறுதிகளை காற்றில் பறக்க விட்டார்கள்.

### கொள்கை இல்லாத கட்சி

நாடு முன்னேறுவதற்கு தி. மு க. விடம் ஒரு கொள்கையோ திட்டமோ எதுவுமில்லை. ஆந்திரா, கன்னடம், தமிழ்நாடு, கேரளம் ஆகிய நான்கு மாநிலங்களை இணைத்து திராவிடநாடு அடைந்தே தீருவோம என்று முன்பு கூறினார்கள். அடைந்தால் திராவிடநாடு இல்லையேல் எங்கள் பிணம்தான் சுடுகாட்டை நோக்கிப்போகும் என்று கூறிய கருணாநிதி, நெடுஞ்செழியன், மதியழகன், அன்பழகன் எல்லாம் இப்போது உயிரோடுதான் இருக்கிறார்கள். ஆனால் திராவிடநாடு கோரிக்கையை கைகழுவி விட்டார்கள்.

தமிழ்நாட்டில் சென்னை. கோவை, சேலம், மதுரை போன்ற மாவட்டங்களில் தி. மு. கழகத் தொழிலாளர்கள் முதற்கொண்டு அவர்களது கோரிக்கைகளை முன் வைத்து எங்களுடன் சேர்ந்து போராடுகிறார்கள். இதையொட்டி தி. மு. க. ஆட்சியாளர்கள் ரவுடிகளை ஏவிவிட்டு சைக்கிள் செயினால் தொழிலாளர்களை அடித்து படுகாயப்படுத்துகிறார்கள் இதற்கு எல்லாம் நாங்கள் அஞ்சமாட்டோம். பயப்படமாட்டோம்.

சிம்சனில் காட்டூர்கோபாலும் ராஜினாமாச்செய்து ஓடிவிட்டார். இப்போது அங்கே வேலைக்குப் போய் வரும் தொழிலாளர்களை தி. மு க. தொழிலாளர்கள் மீண்டும் தாக்கி ரகளை செய்கிறார்கள்.

### எச்சரிக்கை

இதை போலீஸ் நிர்வாகமும் பார்த்து சும்மா தான் இருக்கிறது. இந்நிலை இன்னும் நீடித்தால் தமிழ்நாடு முழுவதும் உள்ள தொழிலாளர்களை ஒன்று திரட்டி போராட்டம் நடத்துவோம் என்று தமிழக சர்க்காரை எச்சரிக்கிறேன்

விவசாயிகளுக்கு சலுகைகள் செய்வோம் என்று கூறினார்கள். ஆனால் விவசாயத்திற்கு உபயோகப்படுத்தும் மின்சாரக் கட்டணத்தை

(4-ஆம் பக்கம் பார்க்க)

## கூலி உயர்வு வேண்டும்

## சிதம்பரம் சர்வ கட்சி விவசாயத் தொழிலாளர் மாநாடு கோரிக்கை

சிதம்பரம், ஜன. 31—

சிதம்பரம் தாலுகா விவசாயத்தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகள் பற்றி விவாதித்து முடிவு எடுக்க அனைத்துக் கட்சிகளின் சார்பில் விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் விசேஷமாநாடு இங்குள்ள டவுன்ஹால் மைதானத்தில் ஜன. 23ந் தேதி நடைபெற்றது.

முதலில் ஏ.என் சுந்தரம் (சோஷலிஸ்ட் கட்சி) அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.

இந்த மாநாட்டிற்கு தமிழ்நாடு விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் கே. ஆர். ஞானசம்பந்தம் தலைமை வகித்தார், மாநாட்டை வலது கம்யூனிஸ்டு தலைவர் பணலி எல். கந்தசாமி எம். எல். ஏ. திறந்து வைத்துப் பேசினார்.

விவசாயிகள் — தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளுக்கு ஒன்றுபட்டு போராடியாக வேண்டுமென்றும் — அப்படி ஒன்றுபட்டு போராடினால்தான் வெற்றி பெறமுடியும் என்றும்— அதைத்தான் சிம்சன் தொழிலாளர் போராட்டம் எடுத்துக் காட்டுகிறது என்றும் கூறினார்.

அதன்பின் மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் என். ஆர். ராமசாமி (மார்க்சிஸ்ட்), எல் இளையபெருமாள் (ஸ்தாபன காங்கிரஸ்) பூ அரசன் (ஸ்தாபன காங்கிரஸ்), எஸ். சிவசுப்ரமணியன் (இந்திரா காங்கிரஸ்) ஆகியோர் பேசினர்.

இறுதியில் டி.ஆர். விஸ்வநாதன்—(கூட்டு செயல் கமிட்டி கன்வீனர்) தீர்மானங்களை விளக்கி பேசினார்.

### தீர்மானங்கள்

நடைபெறும் அறுவடைக்கு ஆண்களுக்கு 10 லிட்டர் நெல் என்பதை 14 லிட்டராகவும்— பெண்களுக்கு 8 லிட்டர் நெல்என்பதை 10 லிட்டராகவும் கூலியை உயர்த்தித்தர வேண்டும். குத்தகையில் பழைய பாக்கியில் பாதியை ரத்துசெய்யவேண்டும். மீதி பாதிக் குத்தகையை கட்ட 8 வருட தவணை கொடுக்க வேண்டும். புதிய குத்தகையில் 4-ல் 1 பங்கு தள்ளுபடி செய்ய வேண்டும்.

பண்ணையாள் சட்டத்தைத் திருத்தக்கோரியும், 25சதவிகிதம் வரும்படி உயர்வுகோரியும்— மற்றும் நிலவரி குறைப்பு— பூச்சி மருந்து தெளிப்புக்குப் போடப்பட்ட தொகை வசூலிப்பை ஒத்திவைக்கக் கோரியும், ஜாதிக் கொடுமைகளை ஒழிக்க எல். இளைய பெருமாள் கமிட்டி சிபார்சை தீவிரமாக அமுல் செய்யும்படி மத்திய— மாநில அரசுகளை வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாநாடு துவங்குவதற்கு முன்பாக 2000 பேர் கலந்துகொண்ட மிகப் பெரும் ஊர்வலமும்— 5000 பேர்கள் கொண்ட மாபெரும் கூட்டமும் நடைபெற்றன.

சிதம்பரம் தாலுகா விவசாயத் தொழிலாளர் கோரிக்கை சம்பந்தமாக 24—1—72மாவட்ட கலெக்டர், மாவட்ட போலீஸ் சூப்பிரெண்ட்கோட்டாட்சி தலைவர்முன்னிலையில் கூட்டு செயல் கமிட்டியை சார்ந்த எஸ் சிவசுப்ரமண்யம் (இ காங்), எல். இளையபெரு பூ. அரசன்(ஸ்தாபன காங்) டி. ஆர். விஸ்வநாதன் (மார்க்சிஸ்ட்) ஏ முனுசாமி (வ. கம்) பேச்சுவார்த்தை நடத்தியபின் 27-1-72-ல்முக் கூட்டு மாநாட்டை சிதம்பரத்தில் நடத்த மாவட்ட கலெக்டர் ஏற்பாடு செய்வதாகவும் — அதுவரை அறுவடையில் நிறுத்திவைப்பதென்றும் — முடிவுசெய்யப்பட்டது.

### கோரிக்கைப் பொதுக்கூட்டம்

கூட்டுசெயல்கமிட்டி சார்பில் மாநாட்டு முடிவுகளை விளக்கி, திரு நாரயூர் — வெள்ளூர் ஓமாம் புலியூர்— கே. சூளூர் ஆகிய கிராமங்களில் கோரிக்கை பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன.

## பங்களா தேசத்தை மேலும் பல நாடுகள் அங்கீகரித்தன!

### பூட்டோவின் மிரட்டல் பலிக்கவில்லை!

டாக்கா, பிப். 1—

பங்களாதேசத்தை ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து, கம்போடியா ஆகிய நாடுகள் அங்கீகரித்து உள்ளன.

பிரிட்டனும், இன்னும் பல ஐரோப்பிய நாடுகளும் சீக்கிரமே அங்கீகரிக்கப் போவதாக அறிவித்து உள்ளன.

இந்தோனேஷியா, பிஜித் தீவு ஆகிய நாடுகளும் சீக்கிரமே அங்கீகரிப்பதாக அறிவித்து உள்ளன.

இன்னும் சிலநாட்களில் 10 நாடுகளுக்குமேல் பங்களா தேசத்தை அங்கீகரிக்குமென்றும் தெரிகிறது.

எந்த நாடும் அங்கீகரித்தால் அதனுடைய ராஜீயத் தொடர்பை ரத்து செய்வோம் என்று பாகிஸ்தான் மிரட்டிவந்தது. போலந்து, கிழக்கு ஜெர்மனி போன்ற அங்கீகரித்த சிலநாடுகளுடன் உறவை ரத்துசெய்து கொண்டது. இருந்தாலும் இந்த மிரட்டலும், உருட்டலும் பலநாடுகளை அங்கீகரிக்கச் செய்வதிலிருந்து தடுக்க முடியவில்லை.

### சோவியத்தை மிரட்டவில்லை

சோவியத் யூனியன் பங்களாதேசத்தை அங்கீகரித்த போதிலும், பாகிஸ்தான் அதிபர் பூட்டோ, சோவியத் விஷயத்தில் தன்னுடைய மிரட்டலை அமுல் நடத்தவில்லையென்பது குறிப்பிடத் தக்கது.

பிரிட்டன், பங்களாதேசத்தை அங்கீகரிக்கப் போவதாக முன் கூட்டியே பாகிஸ்தானுக்கு தகவல் கொடுத்தது. இதைக் கேட்டதும பூட்டோவின் ஆட்சி காமன்வெல்த் கூட்டுறவிலிருந்து வெளியேறுவதாக அறிவித்ததேயொழிய பிரிட்டன், ஆஸ்திரேலியா போன்ற நாடுகளுடன் ராஜ்ய உறவை ரத்துசெய்யவில்லை.

## தி. மு. க. தலைமைக்கு இரண்டாவது அடி

சென்னை, ஜன. 31—

பக்கிங்காம் அன்ட் கர்னடிக் மில் தொழிலாளர் சங்கத்தின் தலைவர் கணபதியும் மற்ற நிர்வாகஸ்தர்களும் ராஜினாமாச் செய்திருப்பதாக தொழிலாளர் அமைச்சர் திரு. என். வி நடராசன் சட்டமன்றத்தில் நேற்று முன் தினம் அறிவித்தார்.

தி. மு. க.வைச் சேர்ந்த கணபதியும், மற்ற நிர்வாகஸ்தர்களும், காடடூர் கோபால்வழியில், பி.அன்ட்.சி மில் தொழிலாளர் சங்கத்தை கைப்பற்றியவர்களே. இந்த தி. மு. க. தலைமையைத் தூக்கி எறிவதற்காகவும், மற்ற கோரிக்கைகளுக்காகவும் பி அன் சி மில் தொழிலாளர்கள் வேலைநிறுத்தப் போராட்டத்தில் இறங்கினார்கள்.

சிம்சன் தொழிலாளர் போராட்டத்தில் வாங்கிய அடிக்குப்பின், பி.அன்.சி. மில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் தொடங்கிய மூன்றாவது தினத்திலேயே தி. மு க. அரசு வழிக்கு வந்தது.

பி. அன். சி மில் தொழிலாளர்களின் ஒன்றுபட்ட போராட்டத்துக்கு முன் தி. மு க. தலைமை பணிந்தது. கணபதியும், அவரைச் சேர்ந்தவர்களும் ராஜினாமாச்செய்தனர்.

நடுவர் தீர்ப்புப்படி ஊதியப் பாக்கியை தமிழ் புது வருடப் பிறப்புக்கு முன் கொடுக்கவும், மற்ற கோரிக்கைகள் சம்பந்தமாக புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படும் சங்கத் தலைமை பேச்சு நடத்தவும் நிர்வாகம் இணங்கியிருப்பதாக அமைச்சர் நடராசன் அறிவித்தார்.

## மேற்குவங்கத் தேர்தலில் காங்கிரஸ் அடக்குமுறை

## 32 தொகுதிகளில் வேட்பாளர் நடமாடமுடியவில்லை

### ஜோதிபாசு கடிதம்

கல்கத்தா, பிப். 1—

மேற்குவங்கம் முழுதும் இந்திரா காங்கிரசின் சத்ரபரிஷத் குண்டர்கள் மாற்றுக்கட்சியினரைக் கொலைசெய்ய போலீஸ் ஆதரவுடன் வெறியாட்டங்கள் நடத்தி வருகின்றனர். நடைபெற இருக்கும் தேர்தலில் காங்கிரசை எதிர்த்து போட்டியிடும் வேட்பாளர்கள் தாக்கப்படுகின்றனர். 32 தொகுதிகளில் காங்கிரஸ் எதிர்ப்பு வேட்பாளர்களும் அவர்களை ஆதரிக்கும் ஊழியர்களும் வெளியே நடமாட முடியவில்லை. சத்ரபரிஷத் குண்டர்கள் போலீஸ் பாதுகாப்புடன் மக்கள் வசிக்கும் ஒவ்வொரு பகுதிக்கும் சென்று தாக்குதல்களில் ஈடுபட்டுள்ளனர். முன்பு மார்க்சிஸ்ட்கட்சி வெற்றிபெற்ற இந்த 32 தொகுதிகளும் இண்டிகேட் சத்ரபரிஷத்தின் நரவேட்டையாடும் இடங்களாக மாற்றப்பட்டுள்ளன என்று தோழர் ஜோதிபாசு மத்திய மந்திரி சித்தார்த்தசங்கர்ரேக்கு ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறார்.

இதற்கும் தன்னுடைய கட்சிக்கும் அல்லது அரசுக்கும் எத்தகைய தொடர்புமே இல்லை என்று சங்கர்ரே பத்திரிகையாளரிடம் தெரிவித்தார். அப்படியானால் போலீசார் லாரிகளில் வந்து மேற்கூறிய தொகுதிகளில் இறங்கித்தாக்குவதற்கு யார் உத்திரவிட்டார்கள் என்ற கேள்விக்கு அவரிடமிருந்து பதில் இல்லை.

தீக்கதிர்

## திட்டமிட்ட கொலைவெறித் தாக்குதல்

தி. மு. க. ஆட்சியின் திட்டமிட்ட கொலைவெறித் தாக்குதல் ஆவடியில் நடந்துள்ளது. தொழிற்சங்கத் தலைவர்களான தோழர்கள் சிந்தன், குசேலர், கே.எச். சுந்தரம் ஆகிய மூவரையும் உயர்மட்டப் போலீஸ் அதிகாரிகள் திட்டமிட்டு தாக்கிக் கொலை செய்ய முயன்றுள்ளதாகவே தெரிகிறது. அக்ரமமாக, முன்னறிவிப்பு எதுவுமின்றி கூட்டத்தைக் கலைத்த பின், ஒரு வீட்டில் தங்கியிருந்த மேற்கூறிய மூன்று தொழிற் சங்கத்தலைவர்களையும் பெயரைச் சொல்லிக்கொண்டே "இவர் தான்சிந்தன்," "இவர்தான் குசேலர்," "இவர்தான்சுந்தரம்" என்று உச்சரித்துக்கொண்டே பல போலீஸ்காரர்கள் அவர்களைச் சூழ்ந்துகொண்டு தாக்கியுள்ளனர். அவர்கள் மூர்ச்சையடையும்வரைதாக்கியதிலிருந்து, "தி.மு.க.ஆட்சியைக்கவிழ்க்க முயற்சி செய்பவர்கள்" என்று போலீஸ்காரர்கள் முழக்கமிட்டுககொண்டே மூர்க்கத்தனமாக அடித்ததிலிருந்து, திட்டமிட்டுக் கொலை புரியும் நோக்கத்துடன் இந்தத்தாககுதல் நடந்துள்ளது என்று தெளிவாகிறது.

போலீஸ் அதிகாரிகளுக்கு இவ்வாறு தாக்கச்சொல்லி, திட்டவட்டமான உத்தரவு இல்லாமல் இது நடந்திருக்க முடியாது. அதனால்தான் இந்த உண்மைகளெல்லாம் அம்பலமாகிவிடுமோ என்ற அச்சத்தால், முதலமைச்சர் இந்த சம்பவங்கள் குறித்து நீதி விசாரணைக்கு உத்திரவிட மறுத்துள்ளார்.

மாற்றுக் கட்சிகளின் தலைவர்களையும், மாற்றுத் தொழிற்சங்கத் தலைவர்களையும் அடித்து நொறுக்குவதின் மூலமும், கொலை செய்வதின் மூலமும், கருணாநிதி ஆட்சி தொழிலாளர் இயக்கத்தை அடக்கிவிடலாம், தி. மு. க.வின் ஜனவிரோத பாசிஸ்ட் போக்குகளுக்கு எதிராகத்திரண்டுவரும் ஜனநாயக எதிர்ப்பை முறியடித்து விடலாம் என்று நினைக்கிறது.

வரலாற்றின் படிப்பினைகளை, பதவியில் அமர்ந்தபின் தி. மு. க.வினர் மறந்துவிட்டார்கள். சென்ற காலத்தில் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் பயன்படுத்திய அதே செல்லரித்துப் போன அடக்கு முறை பாணங்களை தாமும் பயன்படுத்தி தம்மைப் பதவியில் நிலை நிறுத்திக்கொள்ளலாம் எனக் கனவு காண்கின்றனர்!

அன்னிய ஆட்சியாளர்களும், அதற்குப் பின் வந்த காங்கிரஸ் ஆட்சியாளர்களும் அடைய முடியாத வெற்றியை தாங்கள் பெற்றுவிடலாம என தி மு, க. ஆட்சியாளர்கள் கனவு காண்கின்றனர்!

இத்தகைய மூர்க்கத்தனமான கொலைவெறியாட்டத்தில் தி. மு. க. ஆட்சியாளர்கள் திட்டமிட்டு இறங்கியுள்ளதற்குக் காரணமென்ன?

சிம்சன் தொழிலாளர் பிரச்சினையில் முதலாளியின் கைப்பாவையாக தி. மு. க. தலைமை செயல்பட்டது. தொழிலாளர்கள் மீது அப்பட்டமான அடக்குமுறையின் மூலம் முதலாளிக்குத் தொண்டூழியம் புரிய முனைந்தது.

தி. மு. க. தலைமையின் இந்த முதலாளி வர்க்கச் சேவை மக்கள் மன்றத்திலே அம்பலமாகி, தொழிலாளி வர்க்கத்தின் ஒன்றுபட்ட நடவடிக்கையால் முறியடிக்கப்பட்டது சமீபத்திய நிகழ்ச்சி.

அதே போல் பி. அன். சி. முதலாளிகளுக்கும் தொண்டூழியம் புரிய தி. மு. க. தலைமை புரிந்த சாகசங்கள் ஒன்றுபட்ட தொழிலாளி வர்க்க நடவடிக்கையால் முறியடிக்கப்பட்டதும் சமீபத்திய நிகழ்ச்சி.

இவ்வாறு தி.மு.க.வின் "பொது உடைமைப் பூங்கா" வேடம் கலைக்கப்பட்டு, அப்பட்டமான முதலாளி வர்க்க ஏஜெண்டுகள் இவர்கள் என்பது அம்பலமானபிறகுதான், தன்னுடைய நீசத்தனமான கொலை வெறித் திட்டத்தை கருணாநிதி ஆட்சி அமுல் நடத்த முன் வந்துள்ளது.

எதிர்க்கட்சிக் கூட்டங்களைக் கலைப்பது, மாற்றுக் கட்சித் தலைவர்களையும் ஊழியர்களையும் தாக்குவது, மாற்றுத் தொழிற்சங்கத் தலைவர்களையும் ஊழியர்களையும் தாக்குவது ஆகிய நடவடிக்கைகள் மூலம் மாற்றுக்கட்சியினரிடையே பீதியையும் பயத்தையும் உண்டாக்கி அவர்களை முடமாக்க முனைந்துள்ளது தி. மு. க. ஆட்சி.

தொழிற்சாலைகளுக்கு முன்னுல் கூட்டங்கள்நடத்துவது தொழிற் சங்க இயக்கத்தின் ஜனநாயக உரிமை. தொழிற்சாலைக்குள்ளேயே தொழிற்சங்கப் பிரதிநிதிகள் தங்களது சங்க வேலைகளைக் கவனிக்கலாம் என்று சிம்சன் தொழிற்சாலை விவகாரம் தோன்றியபோது தொழிலாளர் அமைச்சர் என வி நடராசன் பேசியதை யாரும் மறந்துவிட வேண்டாம்.

ஆவடி டாங்கித் தொழிலாளர் கூட்டம் தொழிற்சாலை முன்னிலையில் கூட நடக்கவில்லை. மாறாக ஆவடி ரயில் நிலையத்திற்கருகில் நடந்துள்ளது. இந்தக் கூட்டத்திற்கு தடை விதித்திருப்பதாக முன்கூட்டியே அறிவிக்கப்படவில்லை. அவ்வாறு தடை விதித்திருந்தாலும்கூட, அந்தத் தடையை மீறியவர்களைக் கைது செய்யலாமே தவிர தடிகொண்டு தாக்கவோ வீடுபுகுந்து வீட்டுக்குள்ளிருந்தவர்களைத் தாக்கவோ இவர்களுக்கு உரிமை ஏது?

தமிழகத்திலே நடப்பது ஜனநாயக ஆட்சியா? அல்லது சட்டத்திற்குப் புறம்பான யாகியாவின் ராணுவ சர்வாதிகார ஆட்சியா?

தன்கையில் அதிகாரம் இருக்கும்வரையில் தனக்குச் "சலாம்போட"மறுக்கும் மாற்றுக்கட்சியினரை "ஒரு கை" பார்த்து விடுகிறேன் என்ற பாசிஸ வெறித்தனத்தில் கருணாநிதி ஆட்சி இறங்கிவிட்டதா? தி. மு. க ஆட்சி கடிவாளமிழந்த குதிரையாகி விட்டதா?

அழிவுகாலத்திற்குமுன்புதான்ஆவேசவெறிபிறக்கும் என்பார்கள். அடிபட்ட புலிபோலச் சீறிடும் தி மு. க ஆட்சிக்கு ஒன்று கூறுகிறோம் ஒன்றுபட்ட தொழிலாளரியக்கமும், ஜனநாயக இயக்கமும் வீறுகொண்டெழுந்து இதற்கு முன்பு உங்களை மண்டியிடச்செய்ததுபோல் மீண்டும் மண்டியிடச் செய்யும். இதில் உங்களுக்குச் சந்தேகம் வேண்டாம் என எச்சரிக்கிறோம்.

### மேற்கு வங்கத்தில் அரை பாசிஸ்ட் ஆட்சியைக் கண்டித்து

# அடக்குமுறை எதிர்ப்பு தினம் அனுஷ்டிப்பீர்

## சி.ஐ.டி.யூ. அறைகூவல்

**கல்கத்தா, ஜன. 31 -**

**சி. ஐ. டி. யூ. நிர்வாகஸ்தர்களின் விரிவடைந்த கூட்டம் 1972 ஜனவரி 13-ம் தேதி கல்கத்தாவில் நடைபெற்றது. சி. ஐ. டி. யூ. தலைவர் தோழர் பி. டி. ரணதிவே தலைமை வகித்தார். கூட்டத்தின் முடிவில் கீழ்வரும் அறிக்கை விடுக்கப்பட்டது.**

மேற்கு வங்கத்தில் போலீஸ் அதிகாரிகளின் உடந்தையுடனும், ஆதரவுடனும் சமூக விரோத சக்திகளின் மூலம் ஆளும் காங்கிரஸ் கட்சி, சி. ஐ. டி யூ. தலைவர்கள் மீதும் ஊழியர்கள் மீதும் கொடுந்தாக்குதல் தொடுத்து வருவது பற்றி சி. ஐ. டி. யூ தன் கவலையைத் தெரிவித்துக் கொள்கிறது

**சி. ஐ. டி. யூ. மீது தாக்குதல்**

பல தொழிற் சங்க அலுவலகங்கள் மீது தாக்குதல் தொடுத்து அங்கிருந்த தஸ்தாவேஜுகள் அழிக்கப்பட்டன. சி. ஐ டி. யூ. பலமாக இருக்கும இடங்களில் ஊழியர்களை அச்சுறுத்துவதற்காக அடக்குமுறைத்தாண்டவம் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளது.

இது குறித்து பல புகார்கள் வந்துள்ளபோதிலும் போலீஸ் அதிகாரிகள் எந்த நடவடிக்கையும் எடுக்க மறுக்கிறார்கள். அதற்குப் பதில் போலிக் குற்றச் சாட்டுகளின்பேரில் சி. ஐ. டி. யூ. ஊழியர்களைக் கைது செய்து வருகிறார்கள்.

**கே. ஜி. போஸ் இல்லம் தாக்கப்பட்டது**

அண்மையில் தபால்தந்தி ஊழியர் சங்க தேசிய சம்மேளனத்தின் தலைவர் தோழர் கே. ஜி போசின் இல்லத்தை திட்டமிட்ட ரீதியில் தாக்கப்பட்டதானது, குண்டர்களின் உதவியுடன் தொழிற் சங்க ஜனநாயக இயக்கத்தை நொறுக்குவதற்கு ஆளும் கட்சி வகுத்திருக்கும் சதித்திட்டத்தின் பகுதியேயாகும். இந்தக் கோழைத்தனமான தாக்குதலை சி.ஐ டி. யூ வன்மையாகக் கண்டிக்கிறது. இத்தகைய அட்டூழியங்களை உடனே நிறுத்துமாறு கோருகிறது.

போலீஸ் அதிகாரிகளின் முழு ஒத்துழைப்புடன் ஆளும் காங்கிரஸ் தன்னுடைய திட்டத்தை நீடித்து நிறைவேற்றுமானல் மேற்கு வங்கத்தில் வரவிருக்கும் சட்ட மன்றத் தேர்தல் சுதந்திரமாகவும் நேர்மையாகவும் நடைபெற முடியாது என்று சி. ஐ. டி. யூ. அஞ்சுகிறது.

**அடக்குமுறை தினம்**

நாடெங்குமுள்ள சி.ஐ டி. யூ. சங்கங்களையும் ஜனநாயக நெறிகளைப் போற்றும் மற்ற தொழிற் சங்கங்களையும் மேற்குவங்க தொழிலாளி வர்க்கத்தின் பின்னும் மக்களின் பின்னும் அணிதிரளுமாறும்—ஜனவரி 31-ந் தேதி முதல் பிப்ரவரி 3 வரை ஒரு தினத்தை அடக்கு முறை தினமாக அனுஷ்டிக்குமாறும் சி, ஐ. டி யூ. அறைகூவி அழைக்கிறது.

**ஜனாதிபதியுடன் சந்திப்பு**

அடக்கு முறையையும் குண்டர் தாக்குதலையும் கண்டிப்பதற்காக அணிவகுப்புகளையும் ஆர்ப்பாட்டங்களையும் நடத்த வேண்டும். இந்தக் கூட்டங்களில் இயற்றப்படும் தீர்மானங்கள் பிரதம மந்திரிக்கும், மேற்குவங்க கவர்னருக்கும் அனுப்பப்பட வேண்டும் என்று கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

சி. ஐ. டி யூ. தலைவர் தோழர் பி டி. ரணதிவேயும் பொதுச்செயலாளர் பி. ராமமூர்த்தியும் அடங்கிய தூதுக்குழு ஒன்று இந்திய ஜனாதிபதியைச் சந்தித்து இந்த அட்டூழியங்களை நிறுத்த வேண்டுமென்று கோர வேண்டும் என்றும் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

**அமெரிக்க ஏகாதிபத்திய எதிர்ப்பு**

பங்களாதேசப் போராட்டத்தின்போது அமெரிக்க அரசாங்கம் எடுத்த இந்திய எதிர்ப்பு நிலை, இந்தியாவின் ஆதிபத்திய உரிமையின்

(7-ம் பக்கம் பார்க்க)

### ஆவடியில் நடத்திய அடக்குமுறையை எதிர்த்து

## தீப்பந்த ஊர்வலங்கள்

### மதுரை தாலுகாவில்

மதுரைத் தாலுகா பொன்மேனி கோச்சடைப் பகுதியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைகளின் சார்பில் கண்டன தீப்பந்த ஊர்வலம் நடந்தது.

ஜன. 30-ந்தேதி மாலை 7 மணிக்கு நடந்த இந்த ஊர்வலத்தில் நூற்றுக்கு மேற்பட்டோர் கலந்து கொண்டனர்.

தீப்பந்தங்களுக்கு தோழர் எம் பிச்சைமணி நெருப்புப் பற்ற வைத்து துவக்கி வைத்தார். ஊர்வலம் பிரதான தெருக்களின் வழியாகக் கண்டன முழக்கங்களை எழுப்பிச் சென்றது.

ஊர்வல முடிவில், தோழர் பி. பாக்கியம் தலைமையில் நடந்த கூட்டத்தில் தோழர்கள் சந்திவேல், பன்னீர், துரைசாமி ஆகியோர் தி மு.க. அரசின் அடக்குமுறையைக் கண்டித்துப் பேசினர்.

### மதுரை நகரில்

சென்னையில் தொழிற்சங்கத்தலைவர்கள்மீதும் தொழிலாளர்கள்மீது ஏவிவிடப்பட்ட போலீஸ் அடக்குமுறையைக்கண்டித்து மதுரையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் 13, 14, 15 வது வட்டங்களைச் சேர்ந்த ஊழியர்கள் தீப்பந்த ஊர்வலம் நடத்தினர்.

ஜன 30-ந் தேதி இரவு நடந்த இந்தக்கண்டன ஊர்வலத்தில் சுமார் 200 பேர் கலந்துகொண்டனர். தீப்பந்தங்களையும் செங்கொடிகளையும் தாங்கிக்கொண்டு ஆவேசமாக முழக்கமிட்டனர்.

தி.மு.க அரசின் அடக்குமுறை ஆட்சியை எதிர்த்தும், போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்தும், கைது செய்யப்பட்ட சென்னை தொழிற் சங்கத் தலைவர்களையும், தொழிலாளர்களையும் விடுவிக்கக் கோரியும் போலீஸ் தடியடி பற்றி விசாரணை செய்யக் கோரியும் முழக்கமிட்டனர்.

ஆயிரக்கணக்கான மக்கள் இந்த ஊர்வலத்தினை பார்த்து தங்களது ஆதரவைத் தெரிவித்தனர்.

ஊர்வலம் தைக்கால் தெருவில் தொடங்கி சிம்மக்கல் வழியாக பூந்தோட்டத்தில் முடிவடைந்தது.

### திருச்சியில்

திருச்சியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, வலது கம்யூனிஸ்ட் கட்சிகளின் சார்பில், கண்டன ஊர்வலம் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் எஸ், அழகிரிசாமி தலைமை வகித்தார்.

தோழர்கள் கே ங்கிலி சி.கே.ரங்கசாமி ஆகியோர் பேசினர். போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்தும், 144 தடை உத்தரவை வாபஸ் வாங்கக் கோரியும் கூட்டத்தில்தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### காமன்வெல்த்தை விட்டு பாக். வெளியேறுகிறது

புதுடெல்லி, ஜன. 31— பங்களா தேசத்தை அங்கீகரிக்கப் போவதாக பிரிட்டன், ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகியவை அறிவித்ததையடுத்து பாகிஸ்தான் நேற்று காமன்வெல்த்திலிருந்து வெளியேறியது.

### அல்லிநகரத்தில் அமெரிக்க ஏகாதிபத்திய எதிர்ப்பு தினம்

அல்லிநகரம், ஜன. 29— இங்கு அமெரிக்க ஏகாதிபத்திய எதிர்ப்பு தினமும், பங்களாதேச வெற்றிவிழாவும் ஜனவரி 27-ம நாள் வெகு சிறப்பாக கொண்டாடப்பட்டது.

கூட்டத்திற்கு தோழர் ஆகினி தலைமைவகித்தார். தோழர்கள் தி, கோபால், முருகேசன், துரைராஜ், ஒச்சப்பத்தேவர், ஆர். சுப்பையா, எஸ். ஏ. ரஜாக் மதுரை நன்மாறன் ஆகியோர் பேசினர்.

பங்களாதேசில் நடைபெற்ற வீரம்செறிந்த போராட்டத்தைப் பற்றியும், - யாகியாகான் கொடுமைகளைப் பற்றியும்- அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் சதிவேலைகள் பற்றியும்- கருணாநிதியின் இரட்டை வேடம் பற்றியும் - சிம்சன் தொழிலாளர் போராட்டம் பற்றியு தோழர் நன்மாறன் விரிவாகப் பேசினார். கூட்டத்தில் திரளாக மக்கள் குழுமிருந்தனர்.

### ஆசிரியருக்கு வரையும் மடல்

## பாதுகாப்பு நிதி வசூலுக்கு அரசு ஊழியர் மீது நிர்ப்பந்தம்

ஐயா,

முதலமைச்சர் திரு. கருணாநிதி பாதுகாப்பு நிதிக்கென்று ரூ. 10 கோடி தருவதாக வாக்களித்ததும் போதும்- அரசாங்க ஊழியர்கள் படுகின்ற அவஸ்தையும போதும்! முதலமைச்சரின் முடிவின்படி வசூல் செய்ய தீவிரப்படுத்தும் கலெக்டர்கள் ரூ 100, 200 என்றும், ரூ. 1000, 2000 என்றும் அரசாங்க ஊழியர்கள் தலையில் கட்டி விட்டு விற்றே யாகவேண்டும் என்றவாய்மொழி உத்தரவு இடுவது மன்றி-அப்படி விற்கவில்லை என்றால், சம்பளப்பிடித்தம் கூடச் செய்கின்ற அளவு நடவடிக்கை எடுக்கஒன்றிய ஆணையாளர்களுக்கு வாய்மொழி உத்தரவும் தந்துள்ளனர்.

குறிப்பிட்ட தொகைக்கான லாட்டரி டிக்கட்டுகளைத்திருப்பித்தரக்கூடாது என்பதும், விற்பனைசெய்யும் அரசாங்க ஊழியர்கள் தினமும் கணக்குத் தந்து விற்பனை முன்னேற்றத்தைக் காட்டவும் உத்தரவு தரப்பட்டுள்ளது

சேலம் நகர மன்ற உத்தரவிலும்-செங்கல்பட்டு மாவட்ட பள்ளிப்பட்டு ஒன்றிய உத்தரவிலும் இதைக் காணலாம். ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் தலையில் ரூ 100 வீதம் டிக்கட்டுகளைக் கட்டி முடுக்கி விட்டிருக்கிறார்கள்.

இதில் உள்ள முக்கிய பிரச்சனை என்னவெனில்; ஒரு கிராமம் என்று எடுத்துக்கொண்டால் அங்கிருக்கும் ஆறு ஆசிரியர்களும், கிராம சேவக்குகளும்-கிராமமணியம் கணக்குப்பிள்ளை இதர அதிகாரிகள் உட்பட அனைவரும் ஒரே கிராமத்தில் விற்பனை செய்கின்ற போட்டி இருக்கிறதே-மிகவும் சங்கடமும் துன்பமுமாக இருக்கும்.

'குடும்ப நலத்திட்டம்' என்ற பெயரில் அனுபவித்த கொடுமைகள் நீங்கி விட்டது போல கனவு, கண்டு விழிக்கக் கூட இல்லை— 'லாட்டரி டிக்கட் விற்பனை என்ற பூதம்வந்து தொல்லைதர ஆரம்பித்து விட்டது.

அரசாங்க ஊழியர், ஆசிரியர்கள் அனைவருக்கும்தேசப் பற்று நிரம்ப உண்டு அதில் குறைந்தவர்கள் அல்ல. அவர்கள் அரசாங்கம் கேட்கும் முன்னே ஒரு நாள், இரண்டு நாள் என்று சம்பளத்தைத் தந்தவர்கள்; ஆனால், இப்படி யொரு நிர்பந்தம் தந்து ஊழியர்களை மிகவும் இக்கட்டான நிலைக்குத் தள்ள வேண்டாம். அரசாங்கம் இதில் தகுந்த நடவடிகை எடுக்க வேண்டும். இது அனுதாபத்துடன் கவனிக்க வேண்டிய பிரச்சனையுங் கூட.

தி. மு க. அரசு பதவியேற்ற பின் மாற்றப்பட்டு விட்டார்கள் அரசாங்க ஊழியர்கள் வெறும் வசூலிப்பவர்களாக பிச்சைக்காரர் நிதி என்று பிச்சைக்காரர்களாக்கியதை நாங்கள் மறக்க வில்லை.

எங்களது பிரச்சனைகளைத் தீருங்கள் என்று கேட்டால் தீவிர வாதிகள் என்றும், நக்சல்பாரிகள் என்றும் பட்டம் சூட்டுகிறது அரசு. அரசு நினைத்தால் 10 கோடி திரட்ட வேறு வழியே இல்லையா?

இப்படிக்கு,
பாதிக்கப்பட்ட
ஒரு அரசு ஊழியர்.

### குறிப்புகள்

## ஆந்திர இண்டிகேட் வேட்பாளர் பட்டியல்

இந்திரா காங்கிரஸ் கட்சியின் ஆந்திர மாநில தேர்தல் கமிட்டி தேர்தலுக்கான வேட்பாளர் பட்டியலை தயாரித்துள்ளது.

இந்தப் பட்டியல்தான் நாட்டிலேயே இந்திரா காங்கிரஸ் கட்சியால் கிட்டத்தட்ட ஏகமனதாகத் தயாரிக்கப்பட்ட பட்டியல் என்று அ. இ. கா. க. மேற்பார்வையாளரான மனுபாய் ஷா அறிவித்துள்ளார்.

இந்தப் பட்டியல் ஏகோபித்த ரீதியில் தயாரிக்கப் பட்டதின் மர்மம் என்ன !

இந்தப்பட்டியலை மேலிடம் அப்படியேஏற்கவேண்டும் என்பதற்காக பிரதேச காங்கிரஸ் தேர்தல் கமிட்டி இதைத் தயாரிக்கவில்லை.

யாரை வேட்பாளராகத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற குடுமிப்பிடிச்சண்டையில் தீர்வு காணமுடியாமல் காங்கிரஸ் மேலிடம் இஷ்டம் போல் திருத்தம் செய்துகொள்ளுவதற்கு வேண்டுமென்றே இடம் வைத்து இப்பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளது.

இந்நிலையில் ஏகோபித்த பட்டியல் போயிருப்பதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது?

இந்தப் பட்டியலை எதிர்த்து ஏற்கனவே 2000-க்கு மேற்பட்ட மனுக்கள் போயுள்ளன.

இந்தப் பட்டியல் டில்லிக்குப் போனதும் கூடவே ஆயிரத்துக்கு மேற்பட்ட காங்கிரஸ்காரர்களும் சென்றிருக்கின்றனர். 18 ஆந்திர அமைச்சர்களும் டில்லியில் முகாமிட்டுள்ளனர்.

தேர்தலுக்கு ஒரு வேட்பாளர் பட்டியலைக் கூட தயாரிக்க முடியாத அளவுக்கு ஆந்திர மாநிலத்திலுள்ள இந்திராகாங்கிரஸ் கட்சி தயாரியற்றிருக்கிறது.

கோஷ்டிப் பூசல் முற்றிய நிலையில் வேட்பாளரைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து அமைச்சரவையை உருவாக்குவது வரை எல்லா பொறுப்புகளும் காங்கிரஸ் மேலிடத்திடமும் குறிப்பாக பிரதமர் இந்திரா காந்தியிடம் விடப்பட்டுள்ளது.

இந்தப் பட்டியலைத் தயாரிப்பதற்கு 60 சதவிகித இடங்களை பின்தங்கிய வகுப்பினருக்கும் பெண்களுக்கும் மைனாரிடி வகுப்பினருக்கும் ஒதுக்கவேண்டும் என்ற கொள்கை கடைப்பிடிக்கப் பட்டிருக்கிறதாம்.

இந்த விதி முறையைக் காட்டி இந்திரா காங்கிரஸ் முற்போக்கு வேடம போடுகிறது.

இந்த விதியைப் பின்பற்றி என்ன நடந்திருக்கிறது என்று பார்த்தால் இந்திரா காங்கிரசின் வர்க்கத் தன்மை சுத்த சுயம்பிரகாசமாகப் பளிச்சிடுகிறது.

ஒரு சில பதவிகளை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அளித்து சுரண்டல் வேட்டையை மறைக்கவேண்டுமல்லவா? அதற்காக தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பவர்கள் எல்லாம் யார், யார்?

ஆந்திர மாநிலத்தில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் பட்டியலிலுள்ள பின் தங்கிய வகுப்பினரெல்லாம் காத்தான்களும் சுப்பன்களும் அல்ல.

பஸ் சொந்தக் காரகளாகவும், காண்டிராக்டர்களாகவும், மதுபானம் தயாரிப்பவர்களாகவுமுள்ள பணம் படைத்த பின்தங்கிய வகுப்பினர்தான் இந்தப் பட்டியலில் இடம் பெற்றிருப்பதாக பெருமுதலாளியான கோயங்காவின் "இந்தியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகையே ஜனவரி 27-ம் தேதியன்று செய்தி வெளியிட்டுயுள்ளது.

இந்திரா காங்கிரஸ் கட்சியின் அடித்தளமாக இருப்பவர்களே இந்தச் சுரண்டும் கூட்டம்தானே.

ஆகவே—

இவர்களை வேண்டுமென்றே இந்திரா காங்கிரஸ் தலைமை தேர்ந்தெடுத்துள்ளது. குறிப்பிடத்தகுந்த விதத்தில் ஆளும் காங்கிரஸ் கட்சியின் பட்டியலின் ஜாதித்தன்மை மாறியிருந்தாலும் வர்க்கத்தன்மை மாறவேயில்லை என்று அரசியல் வட்டாரங்களில் பேசப்படுவதையும் "இந்தியன் எக்ஸ் பிரஸ்" வெளியிட்டுள்ளது.

நீதி மன்றத்தில் குற்றச்சாட்டு சுமத்தப்பட்டிருப்பவர் கூட பட்டியலில் இடம் பெற்றிருப்பதும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு குற்றம் சாட்டப்பட்டிருப்பவர் வேறு யார் என்று கண்டு பிடிக்க கலெக்டர்களிடம் அறிக்கை கேட்கப்பட்டிருப்பதை பலர் ஆட்சேபித்துள்ளனர்.

இந்த வேட்பாளர்களின் "பூர்வோத்திரத்தை" வெளிப்படுத்துவதை ஜனநாயக விரோதச் செயல் என்று தென்னேட்டி விசுவநாதன் கூறுகிறார்.

இவர்களுடைய அகராதியில் "ஜனநாயகம்" என்ற பதத்துக்குத்தான் என்ன அர்த்தமோ?

— ஆ. ச.

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

மீது தாக்குதல் என்று சி ஐ. டி. யூ. கருதுகிறது. எல்லா அமெரிக்க நிறுவனங்களையும் நாட்டுடைமையாக்கவேண்டும் என்றும், அமெரிக்க அரசுக்குக் கொடுக்கவேண்டிய கடனை நிறுத்திவைக்க வேண்டும் என்றும், ஒன்றுபட்ட இயக்கம் நடத்துவதற்கு எல்லா தொழிற்சங்க மையங்களுக்கும் அழைப்பு விடுத்திருக்கும் சி.ஐ டி யூ. மையத்தின் நடவடிக்கையை கூட்டம் வரவேற்றது. இப்பிரச்னைகளின் மீது ஒன்றுபட்ட இயக்கம் நடத்தி அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளுக்கு எதிராக, உறுதியான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று இந்திய அரசாங்கத்தை நிர்ப்பந்திக்கும் முறையில் நாடெங்கும் ஒன்றுபட்ட இயக்கம் நடத்துமாறு தொழிலாளி வர்க்கத்தைக் கூட்டம் அறைகூவி அழைக்கிறது.

தி. மு. க. அரசாங்கத்தின் தொழிலாளி வர்க்கக் கொள்கைககு அவர்களுடைய தொழிற்சங்க ஜனநாயக உரிமைகளுக்கும் எதிராக ஒன்றுபட்டுப் போராட்டம் நடத்திய 16 ஆயிரம் சிம்சன் தொழிலாளர்களையும் சி.ஐ.டி.யூ. வாழ்த்துகிறது.

வரும் தேர்தலை உத்தேசித்து நிர்வாகக்குழுக் கூட்டத்தை ஒத்திவைப்பது என தீர்மானிக்கப்பட்டது. தேர்தலுக்குப்பின் இடமும், தேதியும் சி.ஐ.டி. யூ நிர்வாகஸ்தர்களால் நிர்ணயிக்கப்பட்டது.

**சின்காவின் மறைவுக்கு அஞ்சலி**

வடக்கு வங்க தேயிலைத் தோட்டத் தொழிலாளர் சங்க தலைவரும், சி.ஐ.டி.யூ. பொதுக்குழு உறுப்பினருமான தோழர் ராஜேன் சின்காவின் அகால மரணம் குறித்து இரங்கல் தெரிவிக்கப்பட்டது. தோழர் சின்காவின் குடும்பத்துக்கு அனுதாபம் தெரிவிக்கவும் தீர்மானிக்கப்பட்டது.

## பிப். 12 முதல் பஞ்சாலை தொழிலாளர் பொதுவேலை நிறுத்தம்

### கோவை அனைத்து பஞ்சாலை தொழிலாளர் சங்க அறைகூவல்

கோயமுத்தூர் ஜன 28— கோவைமாவட்ட அனைத்துப் பஞ்சாலைத் தொழிற் சங்கங்களின் பஞ்சாலை பிரதிநிதிகள் 2வது மாநாடு ஜன 28ம் தேதி கோவை இராமநாதபுரம் ஐ. என். டி. யு. சி. அலுவலகத்தில், அனைத்துச் சங்கச் செயல் கமிட்டித் தலைவர் திரு கே. ராமசாமி நாயுடு தலைமையில் நடைபெற்றது.

அனைத்துத் தொழிற் சங்கங்களின் தலைவர்களின் கருத்து பரிமாற்றத்திற்குப் பின்னர் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

**தீர்மானம்**

கோவை மாவட்டத்திலுள்ள அனைத்துப் பஞ்சாலைத் தொழிலாளர் மற்றும் ஊழியர் சங்கங்கள் கொடுத்த 19 அம்சக் கோரிக்கை சாசனம் குறித்து 18—1—72ம் தேதி கோவை டெபுடி லேபர் கமிஷனர் நடத்திய சமரச பேச்சின் போதும் சரி, 25ந்தேதி ஆலை அதிபர்கள் சங்கத்தில் நடந்த பேச்சு வார்த்தையின் போதும் சரி, ஆலை அதிபர்கள் கோரிக்கைகளைப் புறக்கணித்து விட்டதை அனைத்துச் சங்கங்களின் ஆலைப் பிரதிநிதிகளின் இம்மாநாடு கடுமையாகக் கண்டிக்கிறது.

அரசினர் நிறைவேற்ற வேண்டிய கோரிக்கைகள் குறித்து, அவர்களின் மெத்தனப்போக்கினை கண்டும் இம்மாநாடு மிகவும் வருந்துகிறது.

இவர்களின் இந்நிலைபாடு தொழிலாளரின் கோரிக்கைகள் குறித்து சமரச முடிவு ஏற்படுவதற்கான சாத்தியக் கூறுகளைத் தகர்த்துவிட்டது என்று இம்மாநாடு கருதுகிறது.

எனவே நிர்ணயிக்கப்பட்டபடி பிப்ரவரி 12ம் நாள் தொட்டு அதாவது 11ம் நாள் இரவு ஷிப்டிலிருந்து- பொது வேலை நிறுத்தத்தைத் தொடங்க வேண்டும் என்று இம்மாநாடு முடிவு செய்கிறது.

வேலை நிறுத்தப்போராட்டத்தை அமைதியாகவும், வெற்றிகரமாகவும் நடத்திடுவதற்கான ஆயத்தங்களை பழுதின்றியும், விரைந்தும் செய்யுமாறு அனைத்துத் தொழிலாளரையும் இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

---

### சென்னை டோல்கேட் அலைடு தொழிலாளர்களுக்கு

## ஆதரவு ஊர்வலம்

சென்னை, ஜன. 29— கடந்த 70 நாட்களுக்கு மேலாக நிர்வாகத்தின் பழி வாங்கும் போக்கை எதிர்த்துப் போராடி வரும் சென்னை டோல்கேட் அலைடு தொழிலாளர்களுக்கு ஆதரவாக ஒரு மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது.

தண்டையார் பேட்டை டேப்லட்ஸ் கம்பெனியின் அருகிலிருந்து புறப்பட்ட அந்த ஊர்வலத்தில் பேசின் பிரிட்ஜ் பவர்ஹவுஸ், டேப்லட்ஸ் கம்பெனி, எல். ஜி. பெருங்காயம், ஜி. ஆர் எஸ். சுந்தரம் எஸ்டேட், சிம்கோ, மெட்ராஸ்மெரின், மெட்டல் பாக்ஸ், நேசனல் கார்பன், மெட்ராஸ் ரப்பர் பாக்டரி, வில்சன் கம்பெனி, யுனிவர்சல் லெமனேட்ஸ் மற்றும் பல தொழிற்சாலைகளைச்சேர்ந்த தொழிலாளர்களும் —வட சென்னை திருவொற்றியூர், பகுதிகளைச் சேர்ந்த மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்களும் அனுதாபிகளும் திரளாக கலந்து கொண்டனர்.

உற்சாகமாக வந்த பெரும் ஊர்வலம் இறுதியில் அலைடு கம்பெனியின் முன் வந்து சேர்ந்தது.

அங்கு நடைபெற்ற பொதுக் கூட்டத்திற்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தோழர் வரதன் தலைமை வகித்தார்.

மற்றும் தோழியர் மைதிலி, தோழர்கள் ராஜா, குப்புசாமி, முத்து, ராமையா, சங்கப் பொதுச் செயலாளர் பி. ஜி. கே. கிருஷ்ணன் ஆகியோர் நிர்வாகத்தின் அடாவடிப் போக்கையும், போலீசாரின் முதலாளி ஆதரவுப் போக்கையும் கண்டித்துப் பேசினர்.

---

## சித்தார்த்தசங்கர்ரே தேர்தலில் நிற்கவில்லை

கல்கத்தா, ஜன. 31— அடக்குமுறைகள், ஒடுக்குமுறைகள் மூலம் மேற்கு வங்கத்தில் பதவிக்கு வந்துவிட சகல ஜனநாயக விரோதச் செயல்களிலும் ஆளும் காங்கிரஸ் ஈடுபட்டுள்ளது அல்லவா?

இக்கொள்கையை அமுல்நடத்தசித்தார்த்த சங்கர்ரே என்ற மத்திய அரசின் மந்திரியை, வங்காள ஆட்சியை கவர்னருக்குப் பதிலாக நடத்தும்படி—இந்திராகாந்தி அனுப்பி வைத்தார்.

இவர் மேற்கு வங்காள மந்திரியாக செயல்பட ஆரம்பித்த நாளிலிருந்து விழுந்த கொலைகளும், நடத்திய துப்பாக்கிச் சூடுகளும் எண்ணிலடங்கா.

இத்தனையும் செய்து மார்ச் மாதத்தில் நடைபெற இருக்கும் மேற்கு வங்கத் தேர்தலில் சட்டசபைக்கு போட்டியிட்டு தலைமைச்சராக இந்திரா காங்கிரசும், சித்தார்த்த சங்கர்ரேயும் திட்டமிட்டிருந்தனர்.

ஆனால் இந்திரா காங்கிரஸ் பேயாட்சிக்கு எதிராக மேற்கு வங்க மக்களும், அங்குள்ள சகல ஜனநாயக சக்திகளும் (வலது கம்யூனிஸ்ட் தவிர)மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைமையில் திரண்டு வருவதின் காரணமாக,சித்தார்த்த சங்கர்ரேக்கு இந்தத் தேர்தல் முடிவு குறித்து சந்தேகம் ஏற்பட்டிருப்பதால், மார்ச் மாதம் நடைபெற இருக்கும் சட்டசபைத் தேர்தலில் போட்டியிட மாட்டேன் என்று அறிவித்து விட்டார்.

இந்த அறிவிப்பை தானே செய்வதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு மேற்கு வங்க காங்கிரஸ் தலைவர் அப்துல்சத்தார் மூலம் அறிவித்துள்ளார்.

---

### நீலகிரி தோட்ட முதலாளிகளின்

# பழிவாங்குதலை முறியடிப்போம்

## தோழர் உமாநாத் அறிக்கை

### அனுதாப வேலை நிறுத்தத்திற்கு கூலிப்பிடிப்பை அனுமதியோம்

**மதுரை, ஜன, 31— தமிழக சி. ஐ. டி. யூ. செயலாளர் தோழர் ஆர். உமாநாத் கீழ்வரும் அறிக்கையை விடுத்துள்ளார்.**

சிம்சன் தொழிலாளர்களின் வீரப் போராட்டத்திற்காதரவாக, மத்திய தொழிற் சங்கங்களின் கூட்டு அறைகூவலுக்கிணங்க, 50,000 நீலகிரி தோட்டத் தொழிலாளர்கள், 11—1—72 தேதியன்று ஒருநாள் அடையாள வேலைநிறுத்தம் செய்ததை அனைவரும் அறிவீர். சிம்சன் தொழிலாளர் பிரச்னையில் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டு, 11—1—72ம்தேதிய மாநிலரீதியான ஹர்த்தால் வாபஸ் பெறப்பட்டாலும், தகவல் போய்ச்சேர தாமதம் ஏற்பட்டபடியால் தொழிலாளிகள் உறுதியாக நின்று ஒற்றுமையுடன் ஆதரவை செயலில் காட்டினார்கள்.

**பழிவாங்குதல்**

சங்க வித்தியாசமின்றி, அரசியல் வித்தியாசமின்றி, செயலில் ஏற்பட்ட இம்மகத்தான ஒற்றுமையை, ஆதரவு நடவடிக்கையையும் கண்ட தோட்ட முதலாளிகள் அதை உடைக்கும் பொருட்டு 50,000 தொழிலாளிகளையும் பழி வாங்க முடிவு செய்துள்ளனர். அதற்காக தொழிலாளிகள் சம்பளத்தில் 8 நாள் சம்பளத்தை ஏன் பிடிக்கக் கூடாது என்பதற்கு காரணம் காட்டுமாறு எல்லா தொழிலாளர்களுக்கும் முதலாளிகள் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள்.

முதலாளிகளின் இந்த தீய முயற்சியை எதிர்த்து 50,000 தோட்டத் தொழிலாளிகள் ஒன்றுபட்டு தைரியமுடன் நின்று உறுதியாக போராடி முறியடிக்க முன்வரவேண்டுமாய் தோட்டத் தொழிலாளிகளை, சி. ஐ. டி. யூ.வின் தமிழக கமிட்டியின் சார்பாக அழைக்கிறேன்.

**ஆதரவுதரவேண்டும்**

தோட்டத் தொழிலாளிகளின் இப்போராட்டத்தை ஆதரித்தும்,முதலாளிகளின் இத்தாக்குதலை தடுக்கும் பொருட்டு, தமிழக அரசு தலையிடக் கோரியும் சி. ஐ. டி.யூ. வில் இணைக்கப்பட்ட சங்கங்கள் ஆர்ப்பாட்டங்கள் நடத்தியும், தீர்மானங்கள் நிறைவேற்றியும், தந்திகள் அனுப்பியும் செயலாற்ற வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

மத்தியத் தொழிற்சங்கங்களின் அறைகூவலுக்கிணங்க இவ்வேலை நிறுத்தம் ஏற்பட்டதால், தோட்ட முதலாளிகளின் பழி வாங்கும் முயற்சியை எதிர்த்துப் போராடும் தோட்டத் தொழிலாளிகளுக்கு துணை நிற்க சி. ஐ. டி. யூ., ஏ. ஐ. டி. யு. சி., எச். எம். எஸ்., ஐ. என். டி. யு. சி. ஸ்தாபனங்கள் கடமைப்பட்டுள்ளார்கள். ஆகவே தோட்டத் தொழிலாளிகளை ஆதரித்து ஏ. ஐ. டி. யு. சி., ஐ. எஸ். டி யு. சி., எச். எம். எஸ். ஸ்தாபனங்கள் முன் வரவேண்டுமென வேண்டுகிறேன்.

---

## அமெரிக்காவுக்கு முஜீப் எச்சரிக்கை

வாஷிங்டன், ஜன. 31— எல்லா பெரிய மேற்கத்தி நாடுகளும் பங்களா தேசத்தை அங்கீகரித்து அமெரிக்கா மட்டும் அங்கீகரிக்காமல் இருந்தால் டாக்காவிலுள்ள அமெரிக்க ராஜதந்திர வட்டாரத்தினர் நாட்டை விட்டு வெளியேறுமாறு கோரப்படுவர் என்று பங்களா தேசப் பிரதமர் ஷேக்முஜிபூர் ரகிமான் எச்சரித்தார்.

''நியூயார்க் டைம்ஸ்'' பத்திரிகையில் கடந்த வெள்ளியன்று இச்செய்தி வெளியாகியது.

''நான் எப்படி அவர்களை (அமெரிக்காவை) அனுமதிக்க முடியும். அவர்கள் நாட்டில் என்னுடைய நாட்டுப் பிரதிநிதித்துவம் இல்லாத போது அமெரிக்க ஏஜென்சி ஏன் இங்கு இருக்க வேண்டும்'' என்று முஜிபூர்ரகிமான் கேட்டதாக ''நியூயார்க் டைம்ஸ் நிருபர்' எழுதியுள்ளார்.

''அவர்கள் இங்கு குழப்பம் விளைவிக்கவா இருக்க வேண்டும். என்னுடைய மக்களைக் கொல்லுவதற்கு பாகிஸ்தானியருக்கு உதவிய, ஆயுதம் கொடுத்த ஓர் அரசாங்கத்துக்கு நான் எப்படி உதவ முடியும்''என்று முஜிபூர்ரகிமான் கேட்டார்.

---

## வேலையில்லா ஆசிரியர்கள் உண்ணாவிரதம்

நாகர்கோவில், ஜன. 30— நாகர்கோவில் அதிகாரி அலுவலகம் முன் 28-1-72 முதல் வேலை இல்லா ஆசிரியர்கள் உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்துள்ளனர்.

சென்ற நவம்பர் மாதம் வேலை இல்லா ஆசிரியர்கள் சங்கநிர்வாகிகள் கல்வி அதிகாரிகளைச் சந்தித்து பேசிய போது வயது வரம்பை தாண்டும் தருவாயில் உள்ளவர்களுக்கு முதலிடம் கொடுத்து வேலையில் அமர்த்துவதாக வாக்குறுதி கொடுத்தனர். இப்போது ஆசிரியர் வேலைக்கு அமர்த்துவதற்கு இன்டர்வியூவிற்கு வயது வரம்பை எட்டியுள்ளவர்கள் புறக்கணிக்கப்படுகின்றனர். எனவே வாக்குறுதியை நிறைவேற்றக்கோரி உண்ணாவிரதம் துவங்கவுள்ளனர்.

---

### ராமமூர்த்தி

## இளைஞர் மன்றம் துவக்கம்

மதுரை, ஜன. 29— மதுரை சோலை அழகுபுரத்தில் ராமமூர்த்தி இளைஞர் மன்றத் துவக்க விழா வெகு சிறப்பாக நடைபெற்றது. தோழர் பி. சுந்தரராஜ் கொடியேற்றி வைத்து மன்றத்தைத் துவக்கி வைத்தார்.

படிப்பகத்தின் தலைவராக தோழர் எஸ். இராமானுஜமும் (பஞ்சாயத்து போர்டு உறுப்பினா) செயலாளராக ஆர். அய்யாக்கண்ணுவும், ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

---

### அரசாங்கப் போக்குவரத்து

# ஆளும் கட்சியினர் கைப்பொம்மையா?

### ஊழல்களை எதிர்த்திட கே. எம். அரிபட் அறைகூவல்

சென்னை, ஜன. 30— அரசாங்க போக்குவரத்து ஊழியர் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் கே. எம். அரிபட் கீழ்வரும் அறிக்கையினை வெளியிட்டுள்ளார்:—

போக்குவரத்தில் அபிவிருத்தி ஏற்படுத்துவதற்காகவும், சிக்கனத்தை அமுலாக்குவதற்காகவுந்தான் மாநிலம் தழுவிய ஒரே போக்குவரத்து இலாகாவை தனித்தனி பிரிவுகளாக (கழகம்) பிரித்து செயல்படுகிறோம் என்று அமைச்சர்கள் பேசினார்கள். ஆனால் வழக்கம்போல் ஊதாரித் தனத்திற்கும், திறமையின்மைக்குந்தான் இந்தப் பல்லவா, பாண்டியா போன்ற அமைப்புகள் பயன்படுகின்றன. ஆடம்பரமாக விழாக்கள் நடத்தி மக்கள் வரிப் பணம் வாரி இறைக்கப்படுகிறது.

**வேண்டியவர்களுக்கு பதவி**

வேண்டியவர்களுக்கு உயர்மட்ட பதவிகளும், கொழுத்த சம்பளமும் மற்றும் கார் போன்ற ஆடம்பரச் சலுகைகளும் வழங்கப்படுகிறது. அமைச்சர்களின் அகராதியில் இதுதான் சிக்கனமோ? ஐ. ஏ. எஸ். அதிகாரிகளின் எண்ணிக்கை பல மடங்கு அதிகமாகி இருக்கிறது. அதிகாரிகளை அதிகமாக்குவதுதான் திறமையை அதிகமாக்கலோ?

ஒதுக்கப்பட்ட வண்டிகளை முறையாகப் பராமரித்து பயணிகளுக்கு காலா காலத்தில் வண்டி கிடைக்கச் செய்வதற்கான உத்தரவாதம் ஏதுவும் இல்லை.

**முதலாளிக்கு இடம்**

மேலும் பொதுத்துறையில் அமைக்கப்பட்ட போக்குவரத்தை, பிரைவேட் லிமிடெட் கம்பெனிகளாக பதிவு செய்து அந்தக் ''கழகங்களில்'' பெரும் பஸ் முதலாளிகளுக்கு இடமளிப்பதற்கான ஏற்பாடுகளையும் அரசு செய்திருக்கிறது. நாட்டுடமையாக்கியதன் பேரால் ஏராளமான நஷ்டஈடு வாரி வழங்கியது போதாதென்று அவர்களுக்கு இந்தப் போக்குவரத்து கழகங்களில் இடம் கொடுப்பதற்கும் திமுக அரசு திட்டம் தயாரித்துள்ளது.

**மீண்டும் தினக்கூலி**

இதே நேரத்தில் தொழிலாளர்களின் பல உரிமைகளையும் பறிக்க முயலுகிறார்கள். நீண்ட காலமாக கடுங் கிளர்ச்சிகள் செய்துபோக்குவரத்திலிருந்து தினக் கூலி என்ற அவல நிலைமையைத் துடைத்தெறிந்தார்கள் தொழிலாளர்கள். ஆனால் இப்போது கேடு கெட்ட அந்தத் தினக்கூலி முறை பல்லவர் போக்கு வரத்து கழகத்தில் மீண்டும் நுழைக்கப்படுகிறது. வேலைவாய்ப்பு அலுவலகம் மூலம் ஆளெடுக்கும் முறையை விட்டு—வட பழனி போன்ற பணிமனைகளில் அதிகாரிகள் நேரடியாக காண்ட்ராக்ட் முறையில் வேலை வாங்க ஆரம்பித்துள்ளனர்.

**தொழிலாளர் நிலை**

போக்குவரத்துத் துறையை தனித்தனியாகப் பிரிப்பதில் அவசரத்தன்மை காட்டிய தி. மு. க. அரசு தொழிலாளர்களின் சர்வீஸ், வேலை நிலை முதலிய பிரச்னைகளில் மயான அமைதியைக் கடைப்பிடிக்கிறது. ஓவர்டைம்சம்பளம். ஆப்டூடி சம்பளம், மெடிக்கல் பில் போன்ற தொழிலாளர்களுக்குக்கிடைக்கவேண்டிய பணம், எந்த அதிகாரி கையெழுத்திட வேண்டும் என்று தெரியாததால் இன்றுவரை கிடைக்காமலேயே இருக்கிறது. இந்த வெட்கக்கேட்டை வேறுஎங்காவது பார்க்கமுடியுமா?

தொழிற் சங்க ஊழியர்களைக் காரணமின்றி இடமாற்றம் செய்வதும், அநியாய தண்டனைகள் மூலம் பழிவாங்குவதும் சர்வ சாதாரணமாகிவிட்டது.

**ஊழல் உறைவிடம்**

பிராவிடன்ட் பண்ட் எல் ஐ. சி, சிறுசேமிப்பு. பண்டிகை அட்வான்ஸ் கோகுலை அட்வான்ஸ், போன்றவற்றிற்கு ஆண்டுக் கணக்கில் கணக்கே கிடையாது. போக்குவரத்துப் பணிமனைகள் ஊழலின் உறைவிடமாக விளங்குகின்றன. பொது மக்களுக்குத் தொல்லை ஒரு பக்கம். மறு பக்கம் தொழிலாளர்களை வாட்டி வதைக்கும் வேதனை. யாருக்காக இந்த தனித்தனி அமைப்புகள் என்பது அமைச்சர்களுக்குத்தான் வெளிச்சம். வாரியங்களையும், போக்கு வரத்துக் கழகங்களையும் அமைப்பதன் மூலம் நடைபெறும் இந்தப் பகற் கொள்ளையை எதிர்த்துக் கண்டனக்குரல் எழுப்ப பொதுமக்கள் முன் வரவேண்டும்.

---

## நெல்லை இந்துக்கல்லூரியில் தோழர் பி.ராமமூர்த்தி

நெல்லை, ஜன. 25— தோழர் பி. ராமமூர்த்தி நெல்லைத் தாலுகாவில், சுற்றுப்பயணம் செய்தார். அப்போது, 25—ம் தேதியன்று மதியம் 12 மணி அளவில், இந்து கல்லூரி மாணவரிடையே, ''சோசலிசம் என்றால் என்ன?'' என்னும் பொருள் பற்றி, சுமார் ஒரு மணி நேரம் பேருரையாற்றினார்.

இந்தப் பேருரைக்கு, ஏராளமான மாணவர்களும் ஆசிரியர்களும், வந்திருந்தனர்.

**தாழையூத்தில் பொதுக்கூட்டம்**

அன்று மாலை, தாழையூத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற பொதுக்கூட்டத்திலும் கலந்துகொண்டு பேசினார்.

கூட்டத்திற்கு தோழர் எம். கே. வேலு தலைமை வகித்தார், தோழர்.என். எஸ். மணி வரவேற்புரை நிகழ்த்தினார். தோழர்கள் எஸ். பாலவிநாயகம், பி.சி. வேலாயுதம், வழக்கறிஞர்கள், ஆர். கிருஷ்ணன்,எஸ். ஆர்.கோபால், ஆர்.இளைய பெருமாள், வி.என்.தாமஸ் நடராசன், இசக்கி ஆகியோர் பேசினார்கள்.

இறுதியில்தோழர்பி.ராமமூர்த்தி தி. மு. க. அரசின் தொழிலாளர் விரோதப் போக்கு பற்றியும், மேற்கு வங்கத்தில் இந்திரா அரசின் பாசிசப் போக்கைக் கண்டித்தும், சிம்சன் தொழிலாளரின் வீரமிக்க போராட்டத்தைக் குறிப்பிட்டும், பங்களாதேஷ் வெற்றி பற்றியும் விரிவாக விளக்க உரையாற்றினார்.

தோழர் பி. ராமமூர்த்திக்கு பல்வேறு அமைப்புக்களின் சார்பில் மாலைகளும் துண்டுகளும் மாலைக்காக நிதியும் அளிக்கப்பட்டன. தோழர் பி ஆரிடம் கட்சி மாநாட்டு நிதி கொடுக்கப்பட்டது. மின் குழு ஊழியர் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் பி. சி. வேலாயுதத்திடம் தொழிற் சங்கக் கட்டிட நிதிக்காக ரூ. 15 கொடுக்கப்பட்டது. செங்கொடி ஏற்றும்பொழுது வாண வெடிகள் முழக்கப்பட்டன.

கூட்ட இறுதியில் பாவலர் எஸ். மகராஜன் குழுவின் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது.

தோழர் என். எஸ். மணி நன்றிகூற கூட்டம் இனிது முடிவுற்றது. நநி

---

### சி. ஐ. டி யூ. தலைமையில்

## தொழிலாளர் வெற்றி!

அம்பத்தூர், ஜன. 30— அம்பத்தூர் தொழிற் பேட்டையில் உள்ள ஓமேகா கேபிள்ஸ் தொழிற்சாலையில் சி ஐ டி.யூ வுடன் இணைந்துள்ளஓமேகா இன்சுலேட்டட் கேபில்ஸ்ஊழியர்கள் சங்கம், ஊதிய உயர்வு, மற்றும் பல உரிமைகளுக்காக 5—10—71-ம் தேதி அன்று கோரிக்கை எழுப்பியது. பேச்சுவார்த்தைகள் பல நடத்தியும் நிர்வாகம் ஒத்து வராததால் சங்கம் வேலை நிறுத்த நோட்டீஸ் வழங்கியது. தொழிலாளர்கள் போராடத் தயாராயினர். இதுகண்ட நிர்வாகப் பணிந்து ஒப்பந்தத்துக்கு இசைந்தது.

13—1—72-ம் தேதி அன்று திரு.இரா. செல்லத்துரை, தொழிலாளர் நலத்துறை அலுவலர்-3,சென்னை அவர்களின் முன்னிலையில் நிர்வாகமும், சங்கத்தின் சார்பில் தோழர்கள் ஹரிபட்டும், தயாளனும் ஒப்பந்தத்தில் கையெத்திட்டுள்ளனர்.

**ஒப்பந்த விவரம்**

இதன் மூலம் 9 தொழிலாளர்களுக்கு ரூ 94-ம் 5 பேருக்கு ரூ. 84-ம், 80 பேருக்கு ரூ. 49-லிருந்து ரூ. 69 வரையிலும் ஊதிய உயர்வு கிடைத்துள்ளது. இரவு ஷிப்ட் அலவன்சு 50 காசிலிருந்து ரூ. 1 ஆக உயர்ந்துள்ளது. விடுமுறை நாளில் வேலை செய்வோருக்குச் சிறப்புப் படியாக ரூ. 1 கிடைக்கும். 25 கேஷுவல் தொழிலாளர்களும், 9 அப்ரென்டிஸ் தொழிலாளர்களும் நிரந்தரமாக்கப் படுகின்றனர். இன்னும் ஷூ பால் மற்றும் பல உரிமைகளும் பெறுகின்றனர்.

---

### தொழிற்சங்கத் தலைவர்களுக்கு

## திடீர் மாற்றல் உத்திரவு

### அரசின் பழிவாங்கும் நடவடிக்கை

சேலம், ஜன 30— 28—1—72 அன்று காலை சுமார் 11 மணி அளவில் அரசாங்கப் போக்குவரத்து சேலம் பணி மனையைச் சேர்ந்த தொழிற் சங்கத் தலைவர்கள் நான்கு பேர்களை எந்தவித காரணமும் இல்லாமல் மாற்றப்பட்டுள்ளனர்.

இதைக் கண்டித்து அஸ்த்தம்பட்டி பணிமனையில் இருந்து ஊர்வலம் புறப்பட்டு கூட்டு இயக்குனர் (சேலம்) அலுவலகம் முன்பு மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது.

ஆர்ப்பாட்டத்தில், பீடி தொழிலாளர்கள் சங்கமும், சாயத் தொழிலாளர்கள் சங்கமும் மற்றும் சி. ஐ. டி. யூ. வில் இணைக்கப்பட்டுள்ள சங்கங்களும் கலந்து கொண்டன.

**சொல்லும் செயலும்**

ஆர்ப்பாட்டத்தின் முடிவில், தொழிற் சங்கத் தலைவர்களை மாற்றியதைக் கண்டித்து கூட்டு இயக்குனரிடம் மகஜர் கொடுக்கச் சென்றனர். ஆனால் அவர் இல்லாத காரணத்தால் அவரது உதவியாளரிடம் மகஜர் கொடுக்கப்பட்டது.

தி.மு.க. அரசு, தொழிற் சங்கத்தில் அந்தத் தொழிலில் இருக்கும் தொழிலாளர்களே தலைவராக இருக்க வேண்டும் என்று சொல்லுகிறது. ஆனால் தொழிற் சங்கத்தில் உள்ள முக்கிய தலைவர்களை வேற்று ஊருக்கு மாற்றுகிறது. இதுதான் தி மு. க.அரசின் சொல்லும் செயலுமாகும்.

---

### அறுவை சிகிச்சைக்கு

## ஆள்பிடிக்கும் வேலையை வட்டங்களுக்கு விட்டிடுக!

குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சைக்கு ஆள் பிடித்துவரும் வேலைக்கு, பள்ளி ஆசிரியர்களை கட்டாயமாக ஆட்களை இழுத்து வரவேண்டுமென்றும்—இல்லாவிட்டால் புரமோசன் கிடையாது. இதர பல சலுகைகளும் கிடையாதுஎன்றும் கல்விஅதிகாரிகள் கட்டளைகள் பிறப்பித்து நிர்ப்பந்திப்பதாகவும் பல புகார்கள் வந்துள்ளன.

16, 18 வயது பாலகர்களையும், திருமணம் ஆகாதவர்களையும், பண்டாரம் பரதேசிகளையும். 70, 75 வயது கிழவர்களையும் அறுவை சிகிச்சைக்கு இழுத்து வரவேண்டியிருக்கிறது.

சேலம், புதுக்கோட்டை போன்ற அநேக ஊர்களில் எழுத்தறிவித்த இறைவன்கள் கூடி, 'அறிவு புகட்டும் வேலையைக் கெடுக்காதீர்! ஆள் பிடித்துவர அனுப்பாதீர்!''— என்று கோஷங்கள் எழுப்பிக் கொண்டு, மந்திரிகள் முன்பே கண்டன ஆர்ப்பாட்டங்கள் செய்து வருகிறார்கள்.

எந்த மாநிலத்திலுமில்லாதவாறு, தமிழ்நாட்டில் தான் அறுவைப் பிரச்சாரமும், ஆசிரியர்களுக்கு கெடுபிடிகளும் அதிகமாக நடக்கின்றன.

அறுவைக்கு ஆள் பிடிக்கும் வேலையிலிருந்து, ஆசிரியப் பெரு மக்களை விடுவிக்க ஒரு யோசனை கூறப்பட்டுள்ளது.

திராவிட முன்னேற்றக் கழகத்தின் மாவட்டச் செயலாளர்களின் மேற்பார்வையில் வட்டச் செயலாளர்களுக்கெல்லாம் கட்டளையிட்டு, ''ஒவ்வொரு வட்டச்செயலாளரும் இத்தனை பேர்களைப் பிடித்துவரச் சொல்லி அறுவை சிகிச்சை நடத்திவைக்க வேண்டும்''—என்ற யோசனை கூறப்பட்டுள்ளது. இந்த வேலைகளில் மாவட்டங்கள் ஈடுபட்டால் லட்சாதிபதி ஆகலாமாம்!

# கண்ணோட்டம்

## பாட்டாளிமக்களின் தலைவர்களை படுகொலை செய்யத் திட்டமா?

காட்டிக் கொடுக்கும் காட்டூர் கோபாலைத் துரத்தி விட்டு ... காட்டிக் கொடுத்த துரோக உடன்பாட்டையும் கிழித்து விட்டு ... புது தலைமையைத் தேர்ந்தெடுக்க வேண்டும்; கூடுதலாக நாலு காசு பணம் கிடைத்து வாழ வழி செய்ய வேண்டும் என்பதற்காக 15,000 சிம்சன் தொழிலாளர்கள் நடத்திய வரலாற்றுப் புகழ் மிக்க போராட்டம் நடந்து .. அடுத்தக் கட்டத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறது. இன்னும் கோரிக்கை முடியவில்லை.

இதற்கிடையில் பி. அண்டு சி. மில் தொழிலாளர்கள் 12,000 பேர் வேலை நிறுத்தம் செய்து ... ஒருவாறு சமரசமும் செய்து வேலைக்குப் போயிருக்கிறார்கள். இன்னும் கோரிக்கை முடியவில்லை.

இது 1972—ம் வருடம் ஜனவரி மாதத்தில் நடந்த போராட்டங்கள்!

இப்பொழுது ஆவடி டாங்குத் தொழிற்சாலையின் 2000 தொழிலாளர்கள் ... தங்களின் அடிப்படைச் சம்பளத்தை உயர்த்த வேண்டும் ... வேலைப்பளுவைக் குறைக்க வேண்டும் ... தொழிற்சங்க ஊழியர்களைப் பழி வாங்கக் கூடாது ...இது போன்ற கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

அதற்கு முன்னாலேயே—1971 மத்தியிலேயே ரப்பர் பாக்டரி தொழிலாளர்களும் கடும் போராட்டம் நடத்தி வரலாறு படைத்தார்கள். இவை யாவும் தலைநகர் சென்னையிலே நடந்தவை;

இப்பொழுது பிப்ரவரி மாதம் பிறந்து விட்டது. இனி வெடிக்கப் போகும் போராட்டங்கள், மாவட்டங்களிலே வெடிக்கப் போகின்றன!

ஆறு ஆண்டுகளுக்கு முன்னே ஆரம்பமான ஆலை மூடு விழா......அண்ணா காலத்தில் அதிகமாகி......தம்பி கருணாநிதி காலத்தில் தலைவிரித்து ஆடுகிறது. மூடிக் கிடக்கும் அந்த மில்களை திறந்து நடத்த வேண்டுமென்று... அமைதியாகவும், சமரசப் பேச்சு வார்த்தைகள் மூலமாகவும். பொறுமையான முயற்சிகள் மூலமாகவும்...இன்னும் எந்தெந்த வழிகளையெல்லாம் கடைப்பிடிக்க வேண்டுமென்று கழக அமைச்சர்கள் அசெம்பிளி மேடையில் அறிவுரை கூறுகிறார்களோ, அத்தனை முறைகளையும் நடத்திப் பார்த்து விட்ட பிற்பாடு...அழகுத் தமிழிலே அடுக்குச் சொல்லிலே அமைதிப் பூக்காட்டின் அருமை பெருமைகளையெல்லாம் கேட்டறிந்து கெட்டுப் போன பிற்பாடு... இப்பொழுது வெடிக்கிறது பஞ்சாலை எரிமலை! இந்த மாசம் 12-ம் தேதி முதல் கோவை மாவட்டம் முழுவதுமுள்ள 77 பஞ்சாலைகளின் 60 ஆயிரம் தொழிலாளர்களும் பொது வேலை நிறுத்தப் போரிலே குதிக்கப்போகிறார்கள்!

அதேபோல.. இதே மாதம் 16-ம் தேதி முதல் தமிழக முழுவதுமுள்ள சர்க்கரைஆலைத் தொழிலாளர்கள் போனஸ் கேட்டு...சீருடை கேட்டு...வீட்டு வாடகை அலவன்ஸ் கூட, லீவு வசதிகளும் கேட்டு...வேலை உத்தரவாதம் கேட்டு...உற்பத்தி அதிகரிப்புக்கு ஏற்ப ஊதியச் சலுகை கேட்டு...இப்படி 20 கோரிக்கைகளைக் கேட்டு வேலை நிறுத்தப் போராட்டத்தில் வீறு கொண்டு இறங்கப் போகிறார்கள்!

மேட்டூர் பியர்ட் செல் பாக்டரி போராட்டம் இந்த மாதமும் தொடருகிறது!

வடாற்காடு மாவட்டத்தில் பீடித் தொழிலாளர்கள் உண்ணாவிரதப் போராட்டத்தை முடித்துவிட்டு அடுத்த நடவடிக்கைக்கு ஆயத்தமாயிருக்கிறார்கள்.

பள்ளிபாளையம் பேப்பர் ஆலையிலே பழிவாங்கப் பட்டவர்களுக்கு வேண்டி வேலை நிறுத்தம் நடக்கப் போகிறது!

தென்றே, செங்கோட்டை மில்லிலே பஞ்சப் படியை வெட்டி, வேலைப்பளுவைத் திணித்து, ஆலையைத் திறக்க முயற்சிக்கும் முதலாளியின் சூழ்ச்சிகளை எதிர்த்து... தொழிலாளி மக்கள் ரோடிலே உட்கார்ந்து போராடத் தொடங்குகிறார்கள்!

இப்படி ஒவ்வொரு ஊரிலும் ஏதாவது ஒரு வடிவத்தில் தொழிலாளர்கள் போராடி வருகிறார்கள். தொழிலாளர் மட்டுமென்ன? வாரம் குத்தகைவிவசாயிகள் 30,000 பேர்...தங்கள் உழுது பயிரிட்டுவரும் நிலத்தைப் பிடுங்கி, விரட்டிவிடுவதற்கு நிலப்பிரபுக்கள் செய்துவரும் கோர்ட் நடவடிக்கைகளை எதிர்த்து தஞ்சை மாவட்டம் முழுவதுமே குமுறிக் கொண்டிருக்கிறார்கள்!

சிதம்பரம் வட்டாரக் கிராமப் புறங்களிலும் கூலி உயர்வு கோரி விவசாயத் தொழிலாளர்கள் போராடி வருகிறார்கள்!

மாணவர்களின் கிளர்ச்சிகளோ, சொல்லவே வேண்டாம் பட்டமளிப்பு விழாக்களையெல்லாம் போலீஸ் படையின் தடியடி விழாக்களாகத்தான் நடத்தவேண்டி வந்திருக்கிறது!

இந்தப் போராட்டங்களைப்பற்றியெல்லாம், நமது டாக்டர்கள்...நமது கலைஞர்...நமது முதல்வர்...நமது அமைச்சர்கள்...என்ன நினைக்கிறார்கள்? அவர்களது கழக ஊதுகுழல்கள் என்ன பேசுகின்றன?

இந்தப் போராட்டங்களெல்லாம் தமிழகத்தின் அமைதிப் பூக்காட்டை அழிக்கவே நடத்தப்படுகின்றன என்று குற்றம் சாட்டுகிறார்கள்!...

தொழில் தகராறுகளைப் பயன்படுத்தி, கழக அரசைக் கவிழ்க்க அராஜகவாதிகள் வன்முறைகளைத் தூண்டி விடுகிறார்கள் என்று கடிந்துகொள்ளுகிறார்கள்!

இந்தப் போராட்டங்களெல்லாம் மா-சே-துங்கின் மகிமையைப் பரப்பும் சங்கிணிகளாலும், ஐந்தாம் படைகளாலும்தான் நடத்தப்படுகின்றன என்று ஆத்திரப் படுகிறார்கள்!

இதுதான் அவர்களது பார்வை! நாட்டிலே ஏறியுள்ள விலைவாசிப் புள்ளி எத்தனை? வேலையில்லாக் கொள்ளி எத்தனை? கடன் சுமையும் வரிப்பளுவும்கட்டண உயர்வும் எவ்வளவு? ஆலை தொழிலாளர்களின்இடுப்பை முறிக்கும் வேலைப்பளு எவ்வளவு? கிராமப் புறத்திலே நடக்கும் சுரண்டல் கொடுமை எவ்வளவு?

இவைகளைப் பற்றியும் இதனால்தான் இவ்வளவு நெருக்கடிகள் குமுறுகின்றன என்பதைப் பற்றியும்...சட்ட பூர்வமான, சமாதான சமரச வழிகள் அத்தனையும் பார்த்து அலுத்துப்போய் வேதனை பொறுக்காத நிலையில் தான் வேலை நிறுத்தப் போராட்டங்கள்வெடிக்கின்றனஎன்பதைப் பற்றியும்...கோட்டையிலேவீற்றிருக்கும்கோமான்களின் மண்டைகள் சிந்திப்பதே இல்லை.

மத்திய காங்கிரஸ் அரசின் திட்டங்களும், சட்டங்களும்ஏகபோகடாட்டாக்களுக்கும் பிர்லாக்களுக்கும் கொள்ளையடிக்கவும் கொழுத்துப்பருக்கவும் வழிசெய்திருக்கின்றன என்பதை கருணாநிதி அறியாரோ?

அன்னிய முதலாளிகளுடன் சேர்ந்து கூட்டுக் கொள்ளையடிக்கத்தான் அனுமதியளிக்கிறார்கள் ஆதரவு தருகிறார்கள் என்பதையும் கருணாநிதி அறியாரோ?

தீவிர நிலச் சீர்திருத்தங்கள் செய்வதாக நாம் பறையடித்துக்கொண்டே, நிலப் பிரபுத்துவத் திமிங்கிலங்களைத் தீனிபோட்டு வளர்க்கிறார்கள் என்பதையும் கருணாநிதி அறியாரோ?

# தி. மு. க. அரசின் பாசிசப் போக்கு

## அனைத்துத் தொழிற்சங்கத் தலைவர்கள் கண்டனம்

கோவை, ஜன. 30— சென்னை சம்பவங்களைப் பற்றி பரிசீலிக்க 29-1-72 ல் மாலை அவசரமாகக் கூடிய கோவை தொழிற்சங்கத் தலைவர்கள் பத்திரிகைக்கு விடும் அறிக்கை:—

### அதிர்ச்சி

அமைதியாக தொழிற்சங்கக் கூட்டம் நடத்திக் கொண்டிருந்த சென்னை ஆவடி தொழிலாளர்களையும், கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்த தலைவர்களையும், போலீசார் மிருகத்தனமாகத் தாக்கியதையும், தொழிலாளர் குடியிருப்புகளின் பகுதிக்கு தொழிலாளர் குடும்பங்களைச் சார்ந்தவர்களையும், பிரபல தொழிற்சங்கத் தலைவர்களையும் கூட வீடு புகுந்து இழுத்து வந்து உயிர்போகும் நிலை வரை அடித்துள்ளதை பற்றிய செய்தியைக் கேட்டு அதிர்ச்சி அடைகிறோம்.

இந்தப் பெருந்த கண்டனத்துக்குரிய சம்பவம் தி. மு. க. அரசின் பகிரங்கமான தொழிலாளர் விரோதக் கொள்கையை உறுதி செய்வதாக உள்ளது.

பிரிட்டிஷ் அடக்குமுறைகளையும் மிஞ்சும் தி மு க அரசின் இந்தப் பாசிஸ்ட் போக்கினை கோவை தொழிலாளி வர்க்கம் எதிர்த்து ஒருகுரலில் வன்மையாகக் கண்டிக்கிறது.

### தொழிலாளர் விரோதப் போக்கு

அண்மைக் காலமாக தொழிற்சங்க நடவடிக்கைகளை எடுக்கும் சாதாரண ஜனநாயக, தொழிற்சங்க உரிமைகளைப் பறிக்கும் வகையில், ஒரு தலைப்பட்சமாக தடை உத்தரவுகள் விதிப்பதும், தொழிலாளர் போராட்டங்களை போலீஸ் அடக்குமுறை அட்டூழியங்கள் மூலம் தகர்ப்பதுமான போக்குகளை தி. மு. க அரசு உடனே கைவிட வேண்டுமெனக் கோருகிறோம்.

அரசின் போலீஸ் அடக்குமுறையால் ரத்தம் சிந்திய தொழிலாளர்களுக்கும், தொழிற் சங்கத் தலைவர்களுக்கும் உணர்ச்சிப் பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்

இப்படிக்கு

சி ஐ டி யூ —எம். நஞ்சப்பன்

ஐ. என். டி. யூ சி —கே. ராமசாமி நாயுடு, ஆர். செங்காளியப்பன், சி. என் ரங்கநாதன்.

ஏ. ஐ. டி. யூ. சி எஸ் என். காளியண்ணன், கே. எஸ். வாசுதேவன்.

ஐக்கிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம்—பி. எஸ். சின்னத்துரை, சி. கோவிந்தன்.

எச். எம். எஸ், ஜி. ராமசாமி.

சோஷலிஸ்ட் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம்—கே. சி ராமசாமி.

## அடக்கு முறைகளை கைவிடுக......

(1-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அதிகப்படுத்தி இருக்கிறார்கள். இதை வெல்லாம் மறைப்பதற்காக கருணாநிதி தன்னை கொலை செய்ய சதி செய்கிறார்கள் ஆட்சியைக் கவிழ்க்க நினைக்கிறார்கள் என்று நேரத்திற்கு ஒருபேச்சாகப் பேசுகிறார். இந்நிலை மாற ஏழை பாட்டாளி மக்களுக்குள்ள நல்ல கொள்கையும், திட்டமும் உள்ள கட்சி ஆட்சிக்கு வர வேண்டும்.

இவ்வாறு ராமமூர்த்தி பேசினார்.

கூட்டத்தில் தாலுகா கமிட்டி செயலாளர் தோழர் எஸ் வெங்கிடு தோழர் ராமமூர்த்தியிடம் ரூ 308 கொண்ட பண முடிப்பைக் கொடுத்தார். மற்றும் பல கிளைகள் சார்பாக நிதி கொடுக்கப்பட்டு மலர் மாலைகள், கைத்தறி துண்டுகள் அணிவிக்கப்பட்டன.

கூட்ட ஆரம்பத்தில் நகர சபை கவுன்சிலர் தோழர் எஸ் வள்ளியப்பன், அச்சுத் தொழிலாளர் சங்கசெயலாளர் ராமசுப்பு, பி வி. கணபதிஆகியோர் பேசினார்கள்.

(6-ம் பக்தி தொடர்ச்சி)

போலீஸ் அட்டூழியத்தைக் கண்டித்து ஆர்ப்பாட்டங்கள் நடத்திபோராடும் தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவித்தும், அடியுண்டு நடத்திய அதிகாரியின் மீது அரசு தக்கநடவடிக்கை எடுக்கவும் வற்புறுத்தி குரல் எழுப்புவதோடு, அரசு உடனடியாக தொழிலாளர் கோரிக்கைகளை நிறைவேற்றிக்கைது செய்த அனைவரையும் விடுதலை செய்ய வற்புறுத்தும்படியும் கோருகிறேன்.

தி. மு. க. அரசின் இந்த தொழிலாளர் விரோத போக்கைக் கண்டிக்க அனைத்துச் சகோதர சங்கங்களும், அரசியல் கட்சிகளும் முன்வந்து கூட்டு நடவடிக்கைகளையெடுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

27-1-72-ம் தேதி இரவு வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்கள், தொழிற்சாலை அருகில் கூட்டம் நடத்தியதைக் கலைக்க போலீஸார் தடியடி நடத்தி பல தொழிலாளர்கள் படுகாயம் அடைந்து மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ளனவ.

# ஆவடி அடக்குமுறை

## சி. ஐ. டி. யூ. தமிழக தலைவர் ரமணி கண்டனம்!

கோவை ஜன 30—

சென்னையில் ஆவடியிலுள்ள மத்தியஅரசின் டாங்கு தொழிற்சாலையில், தொழிற்சங்க ஊழியர்கள் பழிவாங்கப்பட்டதாலும், நிர்வாகிகளின் ஆணவப் போக்காலும் கனரக என்ஜினியரிங் தொழிலுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள அடிப்படைச் சம்பளத்தை கொடுக்கமறுத்ததாலும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்ய நிர்ப்பந்திக்கப் பட்டதாலும் வேலை நிறுத்தம் நடக்கிறது. தொழிற்சாலை நிர்வாகிகளின் போக்குதான் இதற்கு காரணம் என்பது தெளிவு.

28-1-72 காலை தொழிலாளர்கள் அனைவரும் தொழிற்சாலை அருகில் கூடி, தொழிற் சங்கத் தலைவர்கள் சிந்தன், குசேலர் கே. எம். சுந்தரம் ஆகியோர் கூட்டத்தில் பேசவந்ததும், போலீஸார் கூட்டத்தை நடத்தவிடாமல் தடுத்தார்கள்

முதல் நாள் இரவு தொழிலாளர்கள் தடியடிக்கு ஆளாகி படுகாயம் அடைந்து ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டுள்ளதை தொழிலாளர்களுக்கு எடுத்துக் கூறி ஆறுதல் சொல்ல கொஞ்சம் அவகாசம் தரும்படி கேட்டதையும் நிராகரித்து போலீஸ் படை தொழிலாளர்கள் மீது பாய்ந்து கண்மூடித்தனமாக தடியடி நடத்தியுள்ளது.

### அடி, உதை

தொழிற் சங்கத் தலைவர் கே. எம். சுந்தரம் அடிபட்டு மண்டை உடைந்து அங்கேயே விழுந்தார். கூட்டத்தில் இருந்த தலைவர்கள் சிந்தன், குசேலர் இருவரும் தாக்கப்பட்டனர் அதன் பிறகு அவர்கள் இருவரும் ஒருவீட்டிற்குள் தங்கியிருக்கும் போது குறி வைத்துத் தாக்கப்பட்டனர்.

### போலீஸ் படை ரோந்து

ஏராளமான தொழிலாளர்களும் பொது மக்கள் பலரும் போலீஸாரின் தடியடிக்கு ஆளாகி படுகாயமடைந்துள்ளார்கள் பெண்கள் பயந்து தெருவில் நடமாடுவதில்லை யென்றும். பெரும்பாலானவர்கள்பயத்தின் காரணமாக வீட்டைப பூட்டிக் கொண்டனரென்றும், ஆண்கள் கூட தெருவில் நடக்க அச்சப்படுவதாயும், போலீஸ் வேன்களில் ரோந்து சுற்றுகிற போலீஸ் படை யாரும் வெளியே வரவேண்டாம் என்று எச்சரிக்கை விடுவதாகவும் பத்திரிகைச்செய்தி மேலும் கூறுகிறது. இந்த பயங்கர நிலை ஆவடியில்குடி கொண்டுள்ளது.

### ஜனநாயகத்திற்கு எதிரானது

தி. மு. க. அரசின் போலீசாருக்கு, தொழிலாளரின் இந்தப் போராட்டத்தை ரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்க அனுமதி கொடுத்துத்தான் இந்த மிருகத்தன தாக்குதல் நடந்திருக்கிறதென்பது திரு கருணாநிதி அவர்களின் சட்டமன்றப் பேச்சுதெளிவாக்கியுள்ளது. நாட்டு நெருக்கடி, பாதுகாப்பு என்ற திரையைப் போட்டுக்கொண்டு திரு. கருணாநிதியின் அரசு இத்தாக்குதலை நடத்தியுள்ளது.

உண்மையில் பாதுகாப்பு பற்றி இவர் அக்கறை உள்ளவராக இருந்திருந்தால் தொழிலாளர்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அநீதியை உடனுக்குடன் விசாரித்து நியாயம் வழங்கி வேலைநிறுத்தத்தை தவிர்த்திருக்கமுடியும். தடியடியும் கண்ணீர் வெடியும், சமாதானத்தை உண்டாக்காது. நாகரீக, ஜனநாயக முறைகளுக்கே எதிரான அடக்கு முறையை ஏவிவிட்டுள்ளதை வன்மையாகக் கண்டிக்கிறேன்.

### ஆர்ப்பாட்டங்கள்

தமிழகத்திலுள்ள சி. ஐ. டி. யூ. சங்கங்களனைத்தும்

(5-ஆம் பத்தி பார்க்க)

இதைத்தானே முதலாளித்துவப் பாதை என்கிறோம் அந்தப் பாதையில் போவதால்தானே நாட்டு மக்கள் நசமானுர்கள்! இதற்கு மாற்றுப் பாதை இல்லாவிட்டால், விலைவாசி ஏறத்தானே செய்யும்! வேலையில்லாத் திண்டாட்டம் மீறத்தானே செய்யும்! வேலை நிறுத்தங்கள் வெடிக்கத்தானே செய்யும்!

இந்தப் போராட்டங்களை உரிய முறையில் தீர்க்காமல்... குண்டாந்தடிகளால் தீர்க்க முயற்சிக்கிறீர்களே, தீர்க்க முடியுமா? துப்பாக்கிகளால் தீர்க்க முனைகிறீர்களே, தீர்க்க முடியுமா? தேசப் பாதுகாப்பு என்றும் சட்டம் ஒழுங்குப் பிரச்சினை என்றும் பேசி பாதுகாப்புச் சட்டங்களை ஏவி, விசாரணையின்றி சிறையிலடைத்து விடுவதால், தீர்த்து விட முடியுமா?

போராடும் தொழிலாளர்களுக்குத் தலைமை தாங்கும் தலைவர்களின் மண்டைகளை உடைத்து விட்டால் ... இக கால்களை முறித்து விட்டால் ... ஏன், அவர்களது இரத்தத்தைக் குடித்து விட்டால் ... உயிர்களைப் பறித்து விட்டால் ... மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட மா மன்றத்திலேயே பொய்களையும் புளுகுகளையும் பொழிந்து தள்ளி விட்டால் ... தொழிலாளர் போராட்டங்களை அடக்கி விடலாம், ஒடுக்கி விடலாம் என்று அடக்கு முறைக் காட்டேரிகளை அவிழ்த்து விட்டு தமிழகத்தைச் சாக்காடாக்கினால், தமிழகம் அமைதிப் பூக்காடாகி விடுமா?

ஒருக்காலும் ஆகப்போவதில்லை வெறுமனே, ஏழைகளின் சிரிப்பிலே இறைவனைக் காணப்போவதாக அடுக்குச் சொல்லை வீசிக்கொண்டே...குண்டாந்தடிகளையும் சைக்கிள் செயின்களையும் ஏவி ஏழைத் தொழிலாளர்களின் இடுப்பை முறிக்கிறீர்கள் அதை ஏழை மக்களும் அனுபவித்துக் கொண்டுதானிருக்கிறார்கள்.

அண்ணாவின் வழியிலே தான் ஆட்சி நடத்துவதாகச் சொல்லிக் கொண்டே...ஆளுகின்ற காங்கிரஸின் வாலைப் பிடித்துக் கொண்டு செல்லுகிறீர்கள். அதே மத்திய அரசின் முதலாளித்துவப்பாதைதான் மாதவ மந்திரிகளின் கருணை கலைஞர்களின பாதையாக இருக்கிறது!

இந்தப் பாதையிலிருந்து திரும்பாத வரை-உண்மையிலேயே உழுபவனுக்கு நிலம்கிடைக்க நிலப்புரபுத்வத்தை ஒழித்திடும் பாதைக்குத் திரும்பாத வரை...ஏகபோகங்களையும் அன்னிய முதலாளிகளையும் ஒழிக்கும் வழிக்கு நீங்கள் திரும்பாத வரையில்...

ஐயா.மந்திரிமார்களே! கழகப் பெருந்தலைவர்களே! உங்களால் நெருக்கடிகளைத் தீர்க்க முடியாது; போராட்டங்களையும் தடுக்க முடியாது.

போராடும் தொழிலாளர்களையும் அவர்களுக்குத் தலைமை தாங்கும் தலைவர்களையும் பற்றி ஏதாவது கேடு கெட்ட அவதூறுகளையும், மானங்கெட்ட பொய்களையும் சொல்லி, போலீசையும் பட்டாளத்தையும் ஏவிஅடித்து நொறுக்குங்கள்! எவ்வளவு இரத்தம் குடிக்கவேண்டுமோ, குடியுங்கள்! பாட்டாளி மக்களின் ஆருயிர்த் தலைவர்களைப் படுகொலை செய்யுங்கள்!

இதற்குப் பெயர்தான் பாட்டாளிப் பாசறை!... இதற்குப் பெயர்தான்பொதுவுடைமைப்பூங்கா...!...இதற்குப் பெயர்தான் சட்டம் ஒழுங்கு!...இதற்குப் பெயர்தான் தேசப்பாதுகாப்பு...இதற்குப் பெயர்தான் அமைதிப் பூக்காடு!...இல்லையா?

—ஐ. மா. பா.

# அரசு அதிகாரிகளுக்கும் தோட்ட முதலாளிகளுக்கும் உறவு என்ன?

குன்னூர் ஜன 23—

தேயிலைத் தோட்ட முதலாளிகள் தொழிலாளர் இலாக்கா அதிகாரிகள் மீது தங்கள் செல்வாக்கை எப்படி பயன்படுத்துகிறார்கள்? முதலாளிகள் சொல்வதை அதிகாரிகள் எப்படி கேட்டு நடக்கிறார்கள்? என்பதற்கு கீழ்க் காணும் விபரங்கள் எடுத்துக்காட்டாக உள்ளன.

தமிழ்நாடு தோட்ட முதலாளிகள். சங்கத்தின் செயலாளர், தோட்ட முதலாளிகளுக்கு எழுதியுள்ள ஒரு கடிதம் இதை தெளிவாக்குகிறது. 10—11—71ம் தேதியிட்டு கடிதம் நிர். 298 (3)-1 11, அவசரம் - ரகசியம் என்று கோடிடப்பட்டு ஆனமலை தோட்ட முதலாளிகள் சங்கம், நீலகிரி தோட்ட முதலாளிகள் சங்கம், வடக்கு வயநாடு தோட்ட முதலாளிகள் சங்கம் ஆகிய அமைப்புகளின் தலைவர்கள், காரியதரிசிகளுக்கு அனுப்பப்பட்டுள்ளது.

### கடிதம்

அக்கடிதத்தில் கூறப்பட்டுள்ளதாவது,

...27—10—71ல், கோவை முத்தூர் துணைத் தொழில் கமிஷனர் அலுவலகத்தில் நடைபெற்ற முத்தரப்புக் கூட்டத்தின் மீதான எனது ரிப்போர்ட் குறித்து தமிழ்நாடு தேயிலைத் தோட்ட அதிபர் சங்க நிர்வாகக்குழுவிற்கு நான் அனுப்பிய 30—10—71ந்தேதியிட்ட 298 (111)-11 எண் உள்ள சுற்றறிக்கையை தயவு செய்து கவனத்தில் எடுத்துக்கொள்ளவும்.

அந்த ரிப்போர்ட் அனுப்பும் வேளையில், 27-10-71ல் துணை தொழிலாளர் கமிஷனர் நடத்திய சமரசப் பேச்சுவார்த்தையின் மீது அவர் செய்ய விரும்பிய சிபாரிசுகள் சம்பந்தமாக கமிஷனர் அவர்களை நான் கோவையில் சந்தித்தேன். மேற்கொண்டு நடைபெற உள்ள பேச்சுவார்த்தைகள் பாக்கியுள்ள காலத்தில் எந்தச் சிபாரிசுகளும் செய்யாமல் நிறுத்திவைக்க அவரை ஒப்புக் கொள்ளும்படிச் செய்ய என்னால் முடிந்திருக்கிறது.

### முதலாளிகளின் கருவி அதிகாரி

இது அம்பலமாக்கியுள்ள உண்மை என்ன? துணை லேபர் கமிஷனர், 27-10-71 தேதி நடைபெற்ற முத்தரப்பு பேச்சுவார்த்தைகளின் மீது செய்யவிருந்த சிபாரிசுகளை முதலாளி சங்கக் காரியதரிசி கண்டு பேசிதடுத்து நிறுத்த முடிந்தது.

முதலாளிகள், அதிகாரிகளைத் தங்கள் இஷ்டப்படி நடக்கச் செய்ய முடிகிறது. தொழிலாளர்களின் நியாயமான உரிமைகளைப் பாதுகாக்க நிற்பதாகக் கூறப்படும் தொழிலாளர் இலாக்கா அதிகாரிகள் முதலாளிமார்களின் சொல்லைக் கேட்டு தொழிலாளர்களுக்கு துரோகமிழைக்கிறார்கள். தொழிலாளி வர்க்கமும் தொழிற்சங்கங்களும் இந்த அதிகாரிகளையும், தொழிலாளர் இலாக்காவையும் எப்படி நம்ப முடியும்?

### தி மு. க. நிலை

நாளைக்கு மூன்று வேளை தொழிலாளர்களுக்காக நிற்பதாக வாய்ச்சவடால் அடித்துவரும் தி. மு. க. மந்திரி மார்கள் இந்த அநியாயத்தைத் தடுப்பார்களா? தொழிலாளி வர்க்கத்தின் போராட்டங்களை உடைக்கவும், தொழிற்சங்கங்களை பலாத்காரமாகக் கைப்பற்றவும், சட்டத்தையும் போலீசையும் தன் கட்சிக்காரர்களையும் தி. மு. க மந்திரிகள்பயன்படுத்தும் போது — அதிகாரிகள் முதலாளிகளுக்காகச் செயல் படுவதில் என்ன ஆச்சரியமுள்ளது.

ஆனால், அனுபவத்தில் இதை உணருகிற தொழிலாளி மக்கள் அனுமதிக்கப் போவதில்லை ஊழலுக்கு முடிவுகட்டப்போராடுவார்கள். தேயிலைத்தோட்டத் தொழிலாளர்கள் முதலாளிமார்களின் பயங்கரச் சுரண்டலை எதிர்த்து போராடிப் பெறுகின்ற சிறு சலுகைகளைக்கூட அனுபவிக்க முடியாமல் அதிகாரிகளை முதலாளிமார்கள் கருவிகளாக்குவதை ஒருக்காலும் சகிக்க மாட்டார்கள். உண்மை ஒரு நாள் வெல்லத்தான் செய்யும்

—ந. நி.

## குமரி தோட்டத் தொழிலாளர்கள் பிப்ரவரி 4-ல் சத்தியாக்கிரகம்

- அரசு ரப்பர் தோட்ட நலச் சட்டத்தை அமுலாக்க
- காட்டு வேலை தொழிலாளர்களுக்கு நிரந்தர வேலை கிடைக்க
- சம்பள உயர்வு — போனஸ் பிரச்சனைகளுக்கு பேச்சு வார்த்தைக்கு வராத முதலாளிகள் மீது நடவடிக்கை எடுக்க அரசை வற்புறுத்தி

### 4-2-72ல் குமரி மாவட்டத்தில் அனைத்துத் தோட்டங்களிலும் சத்தியாக்கிரகம்

குமரி மாவட்ட தொழிற் சங்க சார்பில் அரசு நாடு, மணியன்குழி சுருளோடு, தடிக்காரன் கோணம் ஆகிய இடங்களில் பொதுக்கூட்டங்கள் நடைபெறும்.

# செங்கற்பட்டு மாவட்டத்தில் பிப். 7-ல் விவசாயிகள் ஆர்ப்பாட்டம் செய்ய முடிவு

மீஞ்சூர், ஜன 31 —

செங்கற்பட்டு மாவட்ட விவசாயிகள் சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் மீஞ்சூரில் 24—1—72ல் காலை 10மணி அளவில் சங்கப் பொருளாளர் தோழர் கே. எஸ் நரசிம்மன் அவர்களின் தலைமையில் நடைபெற்றது

செயலாளர் சி. கே. மாணிக்கம் மாவட்டத்தில் நடந்த வேலை அறிக்கையை குழுவின் முன் வைத்து விரிவாகப் பேசினார். அறிக்கையை விவாதித்து ஏகமனதுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பின் தமிழக அரசு விவசாயத்திற்குப் பயன்படுத்தும் மின் கட்டணத்தை 10 நபா பைசாவிலிருந்து 12 பைசாவாக உயர்த்தியதைக்கண்டித்தும், தஞ்சை விவசாயத் தொழிலாளர் கூலி உயர்வுச் சட்டத்தை செங்கை மாவட்டத்திற்கும் அமுல் படுத்தக் கோரியும், குடியிருப்பு மனைக்கட்டுகள் சொந்தமாக்கப் படவேண்டுமென்றும்- தரிசு புறம்போக்கு நிலங்களையும்- வன இலாக்காவில் சாகுபடி செய்ய உபயோகமுள்ள தரிசு நிலங்களை, நிலமற்ற விவசாயிகள்- விவசாயத் தொழிலாளர்கள்- ஏழை விவசாயிகளுக்கு விநியோகம் செய்யக்கோரியும், விவசாயிகளுக்கு உயர்த்தப்பட்டுள்ள வரி (செஸ்) உயர்வைக் கண்டித்தும்- சீரான சிறிய நீர்ப்பாசன வசதிகளை செய்ய வற்புறுத்தியும்- பொன்னேரி வட்டத்திலுள்ள வல்லூர் அணைக்கட்டை மேலும் உயர்த்தக் கோரியும், இவ்வாண்டு அணைக்கட்டின் ஆயக்கட்டு நிலங்களில் விளையாத நிலங்களுக்கு வரி வஜா செய்யக் கோரி தமிழக அரசை வற்புறுத்தி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இறுதியாக மேலே கண்ட விவசாயிகளது கோரிக்கைகளை வற்புறுத்தி, தமிழக அரசின் கவனத்திற்குக் கொண்டு செல்வதெனவும், செங்கை மாவட்ட முழுவதும் வட்ட ஆட்சி அலுவலகங்கள் முன் பிப். 7-ந் தேதி ஊர்வலம், ஆர்ப்பாட்டம் நடத்தி வட்ட ஆட்சித் தலைவரிடம் விண்ணப்பங்கள் கொடுப்பது என முடிவு செய்யப்பட்டது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு, வெளியிடுபவர், ஆசிரியர் கே. முத்தையா.